உ

சிவமயம்



வேண்டிய வரந்தருப்

# வரராசை அந்தாதி

( கருத்துரையுடன் )



வித்துவான், பேராசிரியை

ப. நீலா, எம். ஏ., எம். ஃபில்.,

தருமபுரம்.

உ

சிவமயம்

வேண்டிய வரந்தரும்

# வரராசை அந்தாதி

(கருத்துரையுடன்)



உரைவிளக்கம்:

பேராசிரியை, வித்துவான்,

ப. நீலா, எம். ஏ., எம். ஃபில்.,

தருமபுரம்.

8—9—1988

உ

சிவமயம்

# தாயின் திருவடிக்கொரு தமிழ் மலர்

முன்னே யுரைத்தால் முகமனே யொக்கும் இம்மூவுலகுக்(கு)
அன்னையும் அத்தனுமாவாய் அழல்வண்ணா நீயலையோ
உன்னை நினைந்தே கழியுமென் ஆவி கழிந்ததற்பின்
என்னை மறக்கப் பெறாய் எம்பிரான் உன்னை வேண்டியதே.

— திருநாவுக்கரசர்.

சங்கரன்கோவில் என்று இன்று விளங்கும் இத் தலம் கூழை, சீராசை, வரராசை என்ற பெயர்களை யும் கொண்டுள்ளது. கூழைப்பிரான், சங்கரர், சங்கர நாராயணர் என்ற திருநாமங்கள் இறைவனுக்கும், ஆவுடைநாயகி (கோமதி-வடமொழியில்) ஆவுடைத் தோகை, ஆவுடைமாது என்ற திருநாமங்கள் இறைவிக்கும் அமைந்துள்ளன. தலவிருட்சம்-புன்னை மரம்.

'நினைவாரிதயம் நிறைந்திருப்பார் புன்னைநீழ லுற்றோர்' என்று (54) பாடல் குறிக்கும்.

அகப்பொருள் துறையில் கோவைநூலமைப்பில் பாடப்பட்டுள்ள இது அந்தாதியாகவும் உள்ளது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. நூறு பாடல்கள் இருக்கவேண்டும். ஆனால் 99 ஆம் பாடலில் மூன்று வரிகளும், 100 ஆவது பாடல் முழுமையாகவும் கிடைக்காததால் இது கூழையமைப்பில் அமைந்து

கூழையந்தாதி என்பதைக் காரணப் பெயராகவும் கொண்டது. இதனை முதற்பதிப்பிலேயே டாக்டர். உ. வே. சாமிநாதய்யர் குறித்துள்ளார்.

பாடல்களில் சில யமகம் (11 பாடல்கள் 65-74, 98) மடக்கு திரிபுகளுடன் அமைந்துள்ளன. பல பாடல்கள் எளிமையாகப் பொருள்கொள்ள அமைந் துள்ளன. அரிதின் முயன்று 1965 இல் தொடங்கி 69 இல் அந்தாதியைத் திருவாவடுதுறை ஆதீனத் தில் (வெளி. எண். 42. ஆசிரியர் த. ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை) பதிப்பித்தார்கள்.

குறிப்புரையோடு பல்வேறு இடங்களை மேற் கோள்காட்டிப் புலமைமிகுதியும் தோன்றுமாறு பதிப் பித்திருந்தாலும் பிரித்துப் படிக்கவியலாத புணர்ச்சி அமைப்பால் - பாராயணம் செய்ய - பரிந்து எழுத வியலாதவாறு படித்தவர்களும் அல்லலுற்றனர். அதனால் எளிதில் பொருள் விளக்கம் பெறுமாறு பதம் பிரித்து அச்சிடல் அவசியமானது. அத்துடன் கருத் துரையும் இணைந்திடுமாறு, இப்போது ‘வேண்டும் வரந்தரும் வரராசை அந்தாதி’ (94 ஆம் பாடல் தொடரே இது) வெளிவருகிறது.

காலமறிந்துதவும் தாயான வான்கருணை யுடைப்பெருமான் என்றே நாம் வணங்க, அருட் செங்கோலோச்சும் தருமைஆதீனம் இருபத்தாருவது குருமகாசந்நிதானம் அவர்கள் பொற்பாதமலர்களைப் பக்தியுடன் சிரத்தில் அணிந்து மகிழ்கிறேன்.

நூல் வெளிவரத் திருவருள் வாய்ப்பாக, செந்தமிழ்ச்செல்வர். டாக்டர். திரு.ம.வே.ஜயராமன் அவர்கள் உதவியமைந்தது. அவர்கள் அன்பை நன்றியுடன் ஏற்று இம்மலரை அவர்களின் தலை மகனின் திருமணப் பரிசாகவே அளிக்கின்றேன்.

'முன்னியது முடித்தலின் முருகுஒத்தீயே' (புறம்-56) என்பது சங்கத்தமிழ். அதற்கேற்ற கொள்கைச் செம்மாப்புடன் கொடையுள்ளமும் வாய்க்கப்பெற்ற செந்தமிழ்ச்செல்வருக்கு என் நன்றியை இதன்மூலம் தெரிவித்துக்கொள்கின்றேன். அவர்கள் மக்களொடு மனையறம் காத்து நீடு பீடுடன்வாழச் சொக்கநாதனை வணங்குகின்றேன்.

என் ஆசிரியப் பெருந்தகையாளர் திருநெறிச் செம்மல் திரு வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ., என்மகிழ்வில் மகிழும் இயல்புடையவர். நல்லாற்றுப் படுத்தும் அந்நல்லிதயமே என்னை இவ்வழியில் ஊக்கப்படுத்தி - அணிந்துரையும் தந்தது.

இனிவரும் பிறவிகளிலும் அவர்கள்பால் நன்றியைச் செலுத்தும் கடமையை உணர்ந்து, இப்போது நன்றியைத் தெரிவிக்கின்றேன்.

என் ஆய்விற்கு மட்டுமல்லாமல் வாழ்விற்கும் வழிகாட்டியாக இருக்கும் பனசைச் செந்தமிழ்க் கல்லூரி முன்னாள் முதல்வர் முனைவர் திரு. கு. சுந்தர மூர்த்தி, எம். ஏ., பிஎச். டி., என் மகிழ்வு பெருக

அன்புரை தந்தார்கள். மனம்நிறை நன்றியை அவர்களுக்குத் தெரிவிக்கின்றேன்.

குறிக்கோளோடு வாழ, வாழ்ந்து காட்டி, சொல்லாமல் சொல்லும் என் ஆசிரியப் பெருந்தகை செஞ்சொற்கொண்டல் முனைவர். திரு. சொ. சிங்கார வேலன், எம். ஏ., பிஎச். டி., அவர்கள் மிக மகிழ்ந்து தந்த மகிழ்வுரைக்கு அகம்நிறை நன்றி தெரிவிக்கின்றேன்.

நூல் சிறப்புக்கு நிழற்படம்தந்து சீர்மைசேர்த்த நல்லவர், போட்டோ. என். இராமகிருஷ்ணு அவர்கள்பால் நன்றியுடையேன். விரைந்து அழகுற அச்சிட்டுத் தந்த ஞானசம்பந்தம் அச்சகத்தாருக்கும், கெழுதகை நண்பர் திரு. கா. ம. கண்ணப்பன், எம். ஏ., பி. எட்., அவர்களுக்கும் என் அன்பைப் புலப்படுத்திக் கொள்கிறேன். சங்கரன் கோவில் தேவஸ்தானத்திற்கு என்றும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையேன்.

அன்னையின் பாதமலரே ஆறுதலும் தேறுதலும் தருவதால், அதனை வணங்கி அதற்கே பணிசெய்து அமைகிறேன்.

இனியநட்புடன்.

தருமபுரம்,
8—9—88.

ப. நீலா
பேராசிரியை

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

வழங்கியருளிய

# ஆசியுரை

"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே"

அந்தாதி என்பது ஒரு செய்யுளின் இறுதியை அடுத்த செய்யுளின் தொடக்கமாக வைத்துப்பாடும் சுவிமரபுகளுள் ஒன்று. இத்தகு அந்தாதி இலக்கியங்கள் நூறு பாடல்களால் பாடப்படுதல் மரபு. நூறு பாடல்கள் கொண்ட அந்தாதித் தொடையால் அமைந்த சதகம் என்ற பழந்தமிழ் வடிவமே பிற்காலத்தில் அந்தாதி என வேறுபட வழங்கப்பெற்றது. இவ்வந்தாதி பிற்காலப் புலவோர்களால் ஒலியல் அந்தாதி, பதிற்றுப்பத்தந்தாதி, நூற்றந்தாதி எனப் பல வகையால் பாடப்பெற்றது. நூறு பாடல்களால், அந்தாதித் தொடை அமைத்துப்பாடும் முதல் முயற்சி, திருவாசகத்தில் இடம் பெறும் திருச்சதகத்தில்தான் காணப்படுகிறது. அந்தாதி, வெண்பா மற்றும் கலித்துறையாப்பில் அமைகிறது.

தமிழில் தோன்றிய நூற்றந்தாதிகளுள் ஒன்று வரராசை அந்தாதி என்பது. ராசை என்ற சொல் தற்காலத்தில் சங்கரன்கோயில் என்று வழங்கும் தலத்தின் பழம்பெயர் களுள் ஒன்று. சங்கரநாராயணர்கோயில் என்று இன்று இது

வழங்கப்பெற்று வருகின்றது. இத்தலத்தில் இறைவர் சங்கர லிங்கம் என்றும், அம்மை கோமதி என்றும் வழங்கப்பெறுவர். கோமதி என்ற திருநாமம் சிவலிங்கத் திருமேனியில் அமைந் துள்ள சக்திக்கூருகிய கோமுகி என்ற சொல்லின் அடிப்படை யில் உருப்பெற்றிருக்கலாம் எனத் தெரிகின்றது. விஷ்ணு மூர்த்தியோ, வைணவ வழிபாடோ சைவத்திற்கு மாருனதோ, சைவத்தின் வேறுபட்டதோ அன்று. சிவத்தின் ஒரு கூறே விஷ்ணு என்பதை நமது பழம்நூல்கள் நன்கு விளக்குகின்றன. இத்தத்துவத்தின் விளக்கமாக ஒருபாதி சிவனுகவும், ஒருபாதி திருமாலாகவும் கொண்டிலங்கும் சங்கரநாராயணர் திரு வுருவம் இத்தலத்தில் அமைந்துள்ளது.

## தலப்பெயரும் பெருமையும் :

அங்கிங்கெனுதபடி எங்கும் இறைவன் நிறைந்திருந் தாலும் மூர்த்தி தலம் தீர்த்த விசேடத்துடன் சில இடங்களில் தான் அப்பெருமான் விரும்பியமர்ந்து அருள்பாலிக்கின்ருன்.

அப்படியான தலங்களில், பஞ்சபூத தலங்கள் என்ற அமைப்பில் இச்சங்கரன் கோவில் பிருதிவித் (மண்) தலமாகிறது.

இத்தலத்தில் ஒருபுற்றில் பாம்பின் திருவுருவத்துடன் எழுந்தருளியிருந்த பெருமான், காட்டை நாடாக்க முயன்ற மணிக்கிரீவன் என்பவனுல் வெட்டப்பட்டு (வாலறுபட்டு) கூழை வடிவத்துடன் காட்சி தந்ததால், கூழைப்பிரான் என்ற திருப்பெயர் பெற்று விளங்குகின்ருன்.

பாம்புப் புற்றும் அதில் வாழும் பாம்பும் இன்றும் வழிபாட்டுக்குரியனவாகிப் புற்றுமண் பிரசாதமாகவும் பக்தர் களுக்குக் கொடுக்கப்படுகிறது.

ஸ்ரீ ராசபுரம் என்னும் வடமொழிப் பெயரே ராசையென மருவிற்று. இராசவில்லிபுரம் என்ற மற்ருெரு தலத்தில் மருஉப்பெயருடன் (ராசை) இணைந்திடா வண்ணம் வரம்தரும் பெருமையுடைத் தலம் என்ற கருத்தில் காரணப் பெயராக 'வரராசை' - என வந்திருக்க வேண்டும்.

அதற்கேற்றவாறு முதல் காப்புச் செய்யுள்வரி பொருள் கொள்ள நிற்கிறது.

'ஞானவரர் ஆசையொடு நாட அருள் சங்கரன்' என்பதே அது.

ஞானத்தையும் வரத்தையுமுடையவர்கள் (உம்மைத் தொகை) பின்னும் வரபலம் பெறற்பொருட்டு நாடும் இறைவன். வர முடையவர்களால் மட்டுமே இறைவனை நெருங்க முடியும் என்பதை 'அவனருளாலே அவன் தாள் வணங்கி' – என்று மணிவாசகரும் கூறியிருக்கிருர் அன்ருே!

வரராசை எதுகையமைப்பில் 23 ஆவது பாடலிலும் வந்துள்ளது.

"சுரர் ஆசையால்வந் தனுதினம் போற்றுந் துணைப்பதத்தார்
வரராசை ஆவுடை மாதுபங் காளர்"

என வருகிறது.

இந்நூலின் பழைய பெயர் வரராசையந்தாதியே என்பதும், அதுபயில வழங்காமையால் அதனைச் சங்கரநயினர் கோயிலந்தாதி என்று பதிப்பித்ததாக டாக்டர் ஐயர் அவர்கள் கூறியுள்ளார்கள்.

சங்கரன்கோயில் இறைவன்மேல் பாடப்பெற்ற சிறந்த சிற்றிலக்கியங்களுள் ஒன்ருன வரராசை அந்தாதி சிறந்த

சொற்சுவை, பொருட்சுவை கொண்டிலங்கும் கலித்துறை யாப்பில் அகப்பொருட் கோவைபோல், தலைவி தோழி செவிலி முதலியோர் கூற்றுகளாகப் பாடப்பெற்றுள்ளது. சிலேடை, யமகம், திரிபு முதலிய உத்திகள் அமைந்த இந்நூலுள் சங்கர லிங்கப் பெருமானின் அருளிப்பாடுகள் பலபடப் போற்றப் பெற்றுள்ளன.

வரராசை அந்தாதி என்ற இவ்வரிய நூல் இதற்குமுன் பலமுறை மூலமாகவும் - குறிப்புரையோடும் அச்சியற்றப் பெற்றுள்ளது. தற்போது இந்நூலைச் சந்தி பிரித்துப் பொருள் தொடர்பு நன்கு விளங்கும்படி, பொழிப்புரை எழுதி நம் தருமபுரம் ஆதீனம் கலைக் கல்லூரி, தமிழ்த்துணைபேராசிரியை ப. நீலா அம்மையார் அழகுறப் பதிப்பித்துள்ளார். நூல் நயம், அருஞ்சொற்பொருள் விளக்கத்துடன் காலத்தின் தேவை கருதி எளிய உரை எழுதி இந்நூலைப் பதிப்பித்துள்ள உரை ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

நம் ஆதீன அன்பர் செந்தமிழ்ச்செல்வர், டாக்டர் திரு. ம. வே. ஜயராமன் அவர்கள் உதவியோடு, அவர் குமாரர் திரு. வேங்கடரமணி - விஜயலட்சுமி திருமணவிழாப் பரிசாக இந்நூல் வெளிவருவது மகிழ்ச்சிக்குரியது.

இந்நூலைத் தமிழ்மக்கள் ஏற்றுப் போற்றி அருள்மிகு. கோமதியம்மை உடனுய சங்கரநாராயணப் பெருமானின் திருவருளைப் பெற்று வாழ்வாங்கு வாழ ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றேம்.



# அணிந்துரை

தருமை ஆதீனப் புலவர், வித்துவான்
**திரு. வி. சா. குருசாமி தேசிகர்,** எம். ஏ.,
முதல்வர், தருமை ஆதீனக் கலைக் கல்லூரி.

தருமபுரம்
8—9—88

தமிழ்மொழியில் காப்பியங்கள் தோன்றிய காலத்திற்குப் பிறகு காப்பியக் கூறுகள் பலவும் தனித்தனி நூல்களாகத் தோன்றி வளரலாயின. அவையே சிற்றிலக்கியங்கள் எனப் பெற்றன. உலா, பிள்ளைத்தமிழ், தூது, பரணி, மாலை என்பன அவ்வரிசைக்குரியன. இவைகளில் மாலை என்பது பாவகையி னுல் பெயர் பெறுவது. இதே போன்று பாட்டின் இயைபு கருதிப் பெயர் பெறுவதே அந்தாதி என்பதாகும். அந்தாதி நூல், ஒருபாட்டின் இறுதிச் சொல் மறுபாட்டின் முதலாகப் பெறும்படிப் பாடப் பெறுவது. இவ் அமைப்பில் இன்று பலராலும் சுட்டிப் போற்றப் பெறும் நூலாக இலங்குவது அபிராமி அந்தாதி ஆகும். இதேபோன்று சைவ சமய உலகில் அன்பர்கள் பலராலும் சிறந்த பாராயண நூலாக ஏத்திப் போற்றும் சிறப்புடையது சங்கரநயினுர் கோயில் அந்தாதி என்னும் நூலாகும். இதனை ஆக்கியோர் பெயர் தெரியவில்லை.

சிவபெருமானுக்குரிய 64 மூர்த்தங்களுள் ஒன்ருகிய ஸ்ரீ சங்கரநாராயண மூர்த்தத்திற்குரிய தலம் ஸ்ரீ ராசபுரம் என்பதாகும். இத்தலத்திற்குக் கூழை என்றும் ஒரு பெயர் உண்டு. இத்தலத்துப் பெயரோடு இணைத்து இந்நூலைக் கூழை அந்தாதி என்றும் கூறுவர்.

போற்றும் முறை: இறைவனருள் பெறுதல் என்பது எளிய காரியமன்று. பல்லூழிக்காலம் முயன்று அரனை அர்ச்சித் தால் தான் நல்லறிவு சற்றே விளங்கிடும் என்பார்கள் அருளாளர்கள்.

இந்நூலைப் பக்திசிரத்தையுடன் ஓதிப் பயன்பெற அன்பர்கள் எண்ணும்போது – நல்லநாள் (சோமவாரம், குருவாரம், சுக்ரவாரம) ஒன்றில் முப்பொறித் தூய்மையுடன் ஒருமித்த உணர்வோடிருந்து இவ்வந்தாதியை மூன்று முறை பிழையின்றி எழுதவேண்டும். அங்ஙனம் எழுதத் தொடங்குவார் எண்ணிய எண்ணம் ஈடேறப் பெறுவர் என்பது உறுதி.

குறித்த தெல்லாம் முடிக்கும், என்ற வரியும் (14 – ஆம் பாடல்) நினைவார் இதயம் நிறைந்திருப்பார் (54 – ஆம் பாடல்) என்ற வரியும் நூற்பயனை அங்கையின் நெல்லிக்கனி போல் எடுத்தியம்புகின்றன. தெய்வநலம் பொருந்திய இந் நூலின் தன்மை உணர்ந்து ஓதுபவர்க்கே திருவருளும் கைகூடும் என்பதில் ஐயமில்லை.

இந்நூலுக்குத் தெளிவான உரை எழுதி வழங்கியுள்ளவர் எங்கள் கல்லூரிப் பேராசிரியை வித்துவான் திருமதி. ப. நீலா எம். ஏ., எம். ஃபில்., அவர்கள் ஆவார். வேண்டும் இடங்களுக்குச் சந்திபிரித்துப் பொருள் விளக்கத்தைத் தெளிவித்து எழுதியுள்ள இவ்வுரை நூல் பலருக்கும் பெரிதும் பயன்படுவது ஆகும். இவர்கள் இந்நூலைப் பக்தி சிரத்தையோடு பன்முறை ஓதியும் எழுதியும் வந்த புண்ணியப் பேறு உடையவர்கள்.

இவர்கள் வழியொற்றி இத்தகு சிறந்த பக்தி நூலை அன்பர்கள் பலரும் பெற்று நாளும் ஓதியும், எழுதியும் நலமும் வளமும் பெறுவார்களாக!



# அன்புரை

**டாக்டர் கு. சுந்தரமூர்த்தி,** எம். ஏ., பிஎச்., டி.,
பேராசிரியர், அனைத்துலகச் சைவசித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம்,
தருமபுரம்.
14—9—88

செந்தமிழன்னையின் திருவடிகளில் மலர்ந்து வரும் தமிழ்ப் பூக்கள் எண்ணற்றன. நாளும் மலரும் கோட்டுப் பூக்கள் போலாது இவ்வேட்டுப் பூக்கள் அழியாதவைகளாய் நின்று மணம் வீசுகின்றன. அவ்வரிசையில் 'சங்கர நயினர் கோயில் அந்தாதி' யும் அமையும். படிப்போரும், நாளும் பாராயணம் செய்வோரும் பல்கிவரும் நிலையில் - பதம்பிரித்துப் பதிப்பித்த பதிப்பொன்று இன்று மிகத் தேவையா கின்றது. 'சீரேறு திருமாலோர் பாகத்தான் காண்' என்றபடி திருமாலை இடப்பாகங்கொண்ட சங்கரனைப் பற்றிய இவ்வந்தாதி இன்று புதியதலைப்பில் (வேண் டும் வரம் தரும் வரராசையந்தாதி) பதம்பிரிக்கப் பெற்றுக் கருத்துரை வளத்துடன் வெளிவருகிறது.

வைகலும் மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வதற் கும், எண்ணில் நல்லகதி சேர்வதற்கும் இவ்வரிய வழிபாட்டு நூல் பெரிதும் துணை செய்யும்.

இவ்வரிய நூலைச் செவ்விதாகவும் அழகிதாகவும் வெளியிட்டுதவுபவர் அன்பிற்கும் பாராட்டுதற்கும் உரிய பேராசிரியை ப. நீலா எம். ஏ., எம். ஃபில்., அவர்கள் ஆவர். அவர்கள் செந்தமிழ் மணமும், சிவமணமும் கமழ்ந்துவரும் தருமபுரம் ஆதீனம் கலைக்

கல்லூரியில் வளர்ந்தும் வாழ்ந்தும் வருபவர். திரு வருளேயும், குருவருளேயும் தம் இருகண்ணெனப் போற்றி வளர்பவர். கலேபயில் தெளிவும், கட்டுரை வன்மையும் உடைய அவர், மூனைவர் பட்டமும் மிக அணிமையில் பெற உள்ளார். அவர்தம் முயற்சியும், வளர்ச்சியும் மேலும் சிறக்கத் திருவருளேயும் குரு வருளேயும் நினேந்து வாழ்த்துகின்றேன்.

திருவருள் நலம் கனிந்த இப்பாமாலே சிறப்பும் சீர்மையும் மிக்க திருவளர் செல்வன் வெங்கட்ரமணி, திருவளர் செல்வி. விஜயலெட்சுமி ஆகியோர்கள் திருமண வாழ்த்து மலராய் வெளிவருகின்றது. செல்வன் வெங்கட்ரமணியாரின் அருமைத் தந்தை யார் அன்பிற்கும் பாராட்டுதற்கும் உரிய செந்தமிழ்ச் செல்வர் டாக்டர் திரு. ம. வே. ஜயராமன் எம். ஏ., அவர்கள், மொழிபெயர் தேயமாய பெங்களூரில் அறிவும் தொழிலும் தழைய, பல அரிய கல்வி திறுவனங்களேத் தோற்றுவித்து வளர்த்தும், தம் அறிவின் செழுமை விளங்கப் பல பேருரைகளே ஆற்றியும், ஈத்துவக்கும் இன்பமே தலேயாய இன்பம் எனக் கருதி அதன்வழி ஒழுகியும் வரும் பேரன்பர் ஆவர். அவர், அவர்தம் வாழ்க்கைத் துணேவியார், திருமணம் கொள்ளும் பெருமண மக்கள் ஆகிய அனேவருக்கும் சுற்றமும் நட்பும் பெருக, நலமும், வளமும் தழைய அருள்மிகு கோமதியம்மை உடனுய அருள்மிகு சங்கர நாராயணப் பெருமாள் அருள் நலம் சுரக்க, அப்பெருமான் திருவருளே நோக்கி இறைஞ்சுகின்றேன்.

# மகிழ்வுரை

தருமை ஆதீனப்புலவர், மயிலாடுதுறை,
டாக்டர் சொ. சிங்காரவேலன்,
எம். ஏ., பிஎச். டி., 16—9—88
தமிழ்ப்பேராசிரியர், அ. வ. அ. கல்லூரி.

அருளாளர்கள் பாடிய அருட்கவிதைகள் அவர்களின் அருள் வெளிப்பாடாக வந்தவை; தம்மைப் பயில்வோர்க்கு நெறிகாட்டுபவை. எண்ணியவற்றை எல்லாம் திண்ணமாக அருள்பவை. பொருள்புரிந்தோ புரியாமலோ அவற்றை ஓதினாலே உயர்வு கைகூடும்; ஏனெனில் அவற்றை "நிறை மொழி மாந்தர் மறைமொழி" யாகக் கருதவேண்டும். இதனை உலகம் மறந்தால், அவ்வவ்போது எடுத்துக்காட்ட வேண்டிய பொறுப்பு கற்றறிந்த மாந்தர் கடனாக உள்ளது. இந்த வகையில், தருமை ஆதீனக் கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியை ப. நீலா அவர்கள் இந்த அந்தாதி வெளியிட்டி னால் நல்ல செயல் ஒன்றைப் புரிந்துள்ளார். இந்த நூலை எடுத்துக்கொண்டு உரை விளக்கத்துடன் வெளியிடும் செயலை நான் உளமாரப் பாராட்டுகின்றேன். வராாசை அந்தாதி திருவருள் மணம் கமழும் திருநூல்; தென்பாண்டிநாட்டில் அன்னை தவமிருந்த அருள்தலமாம் சங்கரநயினார்கோயில் தந்த அற்புதத் தமிழ்ப் பனுவல்; புன்னைவனநாதர், ஆவுடை நாயகம் என்ற சிறப்புடைய பரம்பொருள் அருளைப் பார் மணக்க எடுத்துரைக்கும் திருவருட் படைப்பு. ''வேண்டிய வரம் தரும்'' என்ற அடைமொழி ஆயிரக்கணக்கான அன்பர் களின் அநுபவத்தால் வந்த செம்மொழி.

அநுபவமும், புலமையும் உடைய உரைவிளக்கம் பாராட்டத்தக்க மெய்ம்மைப் பெற்றி உடையது; 'ஞானவரர்' என்ற தொடக்கமொழியைச் ''சிவஞானத்தை உடைய பெரியோர்'' என்று விளக்குகின்றார். அகப்பொருள் துறை

அமைப்பில் உள்ள பாடல்கள் தோறும் அவ்வத்துறைப் பெயர் சுட்டப்பட்டு அதன்பின் பொருள் விளக்கம் வருகின்றது. அரிய சொற்கள் தனித்தெடுத்துக் காட்டப் பெற்று உரிய விளக்கத்துடன் விளங்குகின்றன. அருணகிரிநாதர் போன்ற அருளாளர் திருவாக்குக்கள் ஆங்காங்கு ஒப்புமைப் பகுதி களாகச் சுட்டப்பெற்றுள்ளன. "கமலபதத் திரவியம்-திருவடிச் செல்வம்;" "இதயாரவிந்தம்-மனமலர்" (பக். 14, 16)என்பன முதலிய இடங்களில் அழகிய மொழிபெயர்ப்பாக்கமும் உள்ளது. ஆசிரியரின் நன்முயற்சியை மகிழ்ச்சியுடன் பாராட்டி அக மகிழ்வு எய்துகின்றேன்.

கருநாடக மாநிலத்தில் செந்தமிழ்ச் செல்வத்தை வாரி வழங்கிவரும் வள்ளல், ஸ்ரீ வெங்கடேசா கல்வி நிலையங்களின் நிறுவுநர் - தாளாளர், தர்மரட்சாமணி, இயலிசை வித்தகர், பெரும்புலவர்க்குப் புரவலராக விளங்கும் செல்வர், டாக்டர் ம. வே. ஜெயராமன் அவர்களின் திருமகன் ம. ஜெ. வெங்கட ரமணி திருமணமலராக இதனை வெளியிடுவது பாராட்டற் குரியது. வேண்டியன எல்லாம் திருவருளால்பெற்றுச்சிறக்கும் பெருவள்ளலார் திருமகன் திருமண மலராக வெளியிடுவதற்கு இதனினும் தக்கநூல் வேறு யாதும் இல்லை எனலாம்.

பெற்றுப் பயன்படுத்தும் அன்பர்களுக்கெல்லாம் இருமை நலங்களும் பெருகும் என்பது உறுதி. அரிய நூல்களைத் தேர்ந்து உரை விளக்கம் தரும் பெரும்பணி திருமிகு ப. நீலா அவர்களுக்கு மேலும் மேலும் தொடரட்டும்! செந்தமிழ்ச் செல்வர் அவர்களும், அவர்களது துணைவியார் திருமதி இராசலட்சுமி அம்மையார் அவர்களும், அவர்கள் குடும்பத் தினரும் செவ்வேற் பெருமான் திருவருளால் நலமெலாம் பெற்று நீடுவாழ்க என வாழ்த்துகின்றேன்!

இந்த அரியநூலைத் திருமண மலராகப் பெற்றுச்சிறக்கும் நம்பி திரு. ம. ஜெ. வெங்கடரமணி அவர்களும், நங்கை திருமதி எஸ். விஜயலட்சுமி அவர்களும் எல்லா நலங்களும் பெற்று இனிது வாழ்க!

உ
சிவமயம்

# வேண்டிய வரந்தரும்

# வரராசை அந்தாதி

## விநாயகர் காப்பு

### வெண்பா

ஞானவர(ர்) ஆசையொடு நாடஅருள் சங்கரற்(கு)அன்
பான வரராசை அந்தாதி — தா(ன்)நவில
வெஞ்சமர்உ வந்தவடி வெங்கரடத் தந்திமுகன்
கஞ்சமரு வந்த அடி காப்பு.

பார்தந்த நான்மறை யோன்பணி ராசைப் பரம,விண்ணு
ளார்தந்த ஆமல கக்கனி யே,யென் றகத்துள்வைக்கும்
நேர்தந்த மாமருங் காவுடை நாயக, நீள்புழைக்கை
ஓர்தந்த மாமத யானைதந் தாயென் றுரைநெஞ்சமே. 1

---

சிவஞானத்தை உடைய பெரியோர், ஆசையொடு நாட அருள் செய்யும் சங்கரனுக்கு அன்பான வரராசை அந்தாதியைச் சொல்ல, கடிய போரை உவந்திடும் மதமொழுகும் யானை முகத்தை உடைய விநாயகப் பெருமானின் தாமரை மலரனைய திருவடிகள் காப்பு (ஆகுக)

## நூல்

1. பூவுலகத்தினைத்தந்த நான்மறையோன் பணிகின்ற ராசைப் பரம, தேவர்கள் தம்தம் அகத்துள் வைக்கும் நெல்லிக்கனியே, நூலினையொத்த இடையை உடைய

உரைக்கடங் கா(து) அண்ண லே,கயல் பாய வுடைந்தகஞ்ச
விரைக்கள்தங் காத வயல்பாயுங் கூழையில், வித்தகர்வெண்
திரைக்கடுஅங் காதரத் தோடயின் ரோர்,பொற் சிகரநெடு
வரைக்கடங் காத வளர்முலை யாள்கண் மருட்டியதே. 2

தேன்ஆ கரக்குளிர் மென்பூச் சொரிந்தயன் செங்கணொடு
பால்நா க(ர்)அக்கு மதியணிந் தோய்,வர ராசைவெள்ளை
ஆனு கரக்குன் றுரித்தோ,யென் றேத்தி யகங்கனலிற்
றூனு(கு) அரக்கு நிகரா யுருகுவர் தஞ்சமென்றே. 3

---

ஆவுடையம்பிகையின் நாயக, ஒரே தந்தமுடைய நீண்ட துதிக்கையுடைய மாமதயானையின் தந்தையே, என்று உரை நெஞ்சமே.

ஆமலகம் - நெல்லி. தந்து நேர் மருங்கு – நூலொத்த இடை. ராசை, இத்தலத்தின் பெயர்.

2. (பாங்கனுக்கு உற்றதுரைத்தல்) அண்ணலே! கயல்கள் பாய்வதனால் உடைந்த தாமரையின் மணம் பொருந்திய தேன், வயலில் பாயும் கூழையில், வெண்திரை (பாற்கடல்) யிலெழுந்த விடத்தை ஆதரத்துடன் உண்ட வித்தகரின் பொன்மலைச் சிகரத்திற்குப் அடங்காத வளர்முலையுடையாளின் கண் என்னை மருட்டியது - அது உரைக்கடங்காது.

திரைக்கடங்காத - திரைக்கடு அங்கு ஆதரத்தோடு, வரைக்கடங்காத – வரைக்கு அடங்காத – என்றே இயல்பாகப் பிரிக்கலாம்.

3. தேன்பொருந்திய மலர்களைத்தூவி அயன் – மால் - நாகர் ஏத்துவர். அக்கு (உருத்திராக்கம்) மதி யணிந்தவன் என்றும், வராராசையானென்றும், வெள்ளை ஆனுடையா

தஞ்ச மளிக்க வருகூழை நம்பர்,கைத் தாமரையால்
நஞ்ச ம(ள்)ளிக்களம் வைத்தருள் வோர்,நறை பூத்தமலர்ப்
பஞ்(சு)அ மளிக்கண் மருவா (ர்)இனியொரு பாவிபெற்ற
அஞ்ச(ம்), அளிக்கண்து யிலாதெவ் வாறுய்யு மாவியுமே. 4

ஆவிக்கு(ம்) ஆவி யனையமின் னே,யினி யந்திபட்டாற்
பாவிக்கு மாவில் குயில்பகை வேய்பகை பாய்பகழிப்
பூஇக்கு மாவில் பகையா ருரைப்பர்!பைம் போதருந்திக்
கோவிக்கு (ம்)ஆவி புடைசூழுங் கூழைக் குழகருக்கே. 5

---

னென்றும், யானையை உரித்தோனென்றும் – அகம் கனலிற் பட்ட அரக்கென உருகுமாறு - தஞ்சமென்று கூறி ஏத்துவர் - அப்படியான பெருமையுடையவன் இத்தலத்திறைவன்.

4. (செவிலிகூற்று) கூழையிறைவன் கைத்தாமரையினால் விடத்தை அள்ளிக் கண்டத்தில் வைத்தான். அவன் தஞ்சம் என்றோரை அருளவருவோன். அவன், மலர்ப் பஞ்சணையில் மருவாததனால், பாவி பெற்ற அன்னமாகிய தலைவியும் கண்துயிலாது வருந்துவள்; இவள் ஆவி உய்யுமாறு ஏதோ! உரிமையால் தன்னை நற்றாயென்றே கூறினள் செவிலி.

5. (தலைவிகூற்று) ஆவிக்கு நிகர் மின்னே! மாலைக் காலத்தில் பாவியாகிய எனக்குக் குயில், புல்லாங்குழல், மலரம்புகள், கரும்புவில் ஆகியன பகையாகின்றன. பசுக்கள் பசிய மலர்களை அருந்தும் படியான குளங்கள் நிறைந்த கூழைக் குழகருக்கு இவற்றை யாருரைப்பார்?

போதருந்திய கோ, விக்கிக்கிடக்கும் ஆவி - குளம் என்க.

குழக(ர்)இ மாசலக் கொம்பொரு பாசங் குடியிருக்கும்
அழகர்,இ மாலயன் போற்றிய கூழை யமலர்வெற்பின்
மழகரி மான வருமண்ண லே,நின்று மண்டுகொலை
பழகரி மாவுண் ணிரவிங்கு நீவரல் பான்மையன்றே. 6

பானலங் கண்ணி யொருபாகர், முக்கட் பரமர்,மலர்த்
தேனலங் கண்ணிறை தென்கூழைச் சங்கரர், செய்யகழல்
மேனலங் கண்ணி யுருகா ரரும்புனல் வேட்டுவெறுங்
கானலங் கண்ணி யுழன்மா னெனவுட் கலங்குவரே. 7

---

6. (பாங்கி தலைவனை இரவுவரல் விலக்கல்) குழகராகவும் அழகராகவும் இருக்கும் கூழையமலர், பாகத்தில் இமவான் கொடி குடியிருக்கிருள். மாலும் அயனும் போற்றும் பெருமை யுடையார். அவர் மலையிடத்தில் யானை போன்ற பெருமிதத் துடன் வரும் தலைவனே! கொலையிற் பழகிய சிங்கம் யானையை உண்ணும் இரவில் நீ இப்படி வருவது நல்லதல்ல.

சரிமான - யானையை ஒப்ப. கொலை பழகு அரி - சிங்கம் அரி – மாவுண்ணும் இரவு, யானையை உண்ணும் இரவுப் பொழுது.

7. மலர்த்தேன்; அலம்கண் (கலப்பை வழியில்) நிறைக்கும் தென்கூழையிறைவர் – கருங்குவளைக் கண்ணியை ஒரு கூறில் உடையவர். அவரின் செய்ய கழல்மேல் இன்பத் தைக் கருதாமல் - பேய்த்தேரை நம்பி வருந்தும் மானெனத் தலைவன் உள் கலங்குகிருனே!

அலக்கண் - துன்பம். அல்ங்கண் எனத் திரிந்தது. வெறுங்கானல்-உராத்துனேத்தேர் (ஊரத்துணையாகாத்தேர்) கானல் நீர்.

கலங்கு தலைச்செய் தருள்,வேல் விழிவளை கந்தரங்கோ
குலங்கு தலைச்சொன் முகிலோதி நூலிடை கோங்கமுலை
மலங்கு தலைப்படும் வாவிகள் சூழ்வர ராசையெந்தை
இலங்கு தலைக்கண்ணி சூடும் பிரான்,வெற் பிளங்கொடிக்கே.

இளந்தென் றலைவட வானல மென்னு, மிகன்மதன்கா
களந்தென் றலையமன் காணென ஏங்கும், கடலகடு
பிளந்தென் றலைவந் தழிப்பதெந் நாளெனும் பேதை
[யிவ்வா(று)
அளந்தென் றலையி லெழுத்தெனுங் கூழை யரும்பொருளே. 9

---

8. (தலைவன் பாங்கனுக்குத் தலைவியின் இயலிடங் கூறல்) மலங்கு என்ற மீன்கள் உலாவும் வாவிகள் சூழ்ந்த வரராசை; எந்தையாம் இறைவன், தலைக்கண்ணிசூடிவிளங்கும் மலையில், கலக்கம் தந்து பின் அருளும் விழிகள் வேல்களே. கழுத்து சங்கம். சொல் - கோகுலமே. (குயில் மொழியே) ஓதி - முகிலே. இடை - நூலே. முலை - கோங்கமே - என்று என் இளங்கொடியை அறிக.

கோகுலம் - குதலைச்சொல்லுக்கு இணை என்க.

9. (பாங்கி கூற்று) கூழையரும் பொருளாம் என்பேதை, இளைய தென்றலை வடவைத் தீ என்பாள்; மன்மதனின் எக்காளமான குயிலைத் தென்திசை யமன் என்பாள்; கடல் வயிறுபிளந்து சூரியன் இருளையழிப்பது எந்நாளோ என்பாள்; இத்துன்பங்களுக்கு என்தலையெழுத்தே காரணம் என்று இடைவிடாமல் பேசி வருந்துவாள்.

எல் - சூரியன். அல் - இருள். அகடு - வயிறு.

அரும்பா தகஞ்சன னந்தொறுஞ் செய்குவ தன்றி,யுன்னை
விரும்பா தகம்,சமன் விட்டுவி டான்,கதி வீடருள
வரும்பா தகஞ்சமும் வாய்க்குங் கொலோ,இம வானளித்த
கரும்பா தகஞ்சலி விண்ணோர்செய் கூழைக் கறைக்கண்டனே.

கறையர வப்புலி சூடிய கூழைக்கங் காளர்,சது
மறையர வம்புலி வாழ்புர மாய்த்தவர், மங்கை பங்கர்
முறையர (வு)அம்புலி போற்றீச ரென்று மொழிந்தவர்பால்
உறையர, வம்பு லிபித்தா னயனிந்த வொண்டொடிக்கே. 11

---

10. இமவானளித்த கரும்பும் விண்ணோரும் தகுதிபெற அஞ்சலி செய்யும் கூழைவாழ் நீலகண்டனே! கொடிய பாதகங் களைப் பிறவிதோறும் செய்வதல்லாமல், உள்ளம் உன்னை விரும்புவதில்லை. யமனோ என்னை விட்டுப் போகான். மேலான கதியாம் வீடருள நின்பாத மலர்கள் வாய்க்குமோ!

இறைவி தவமிருந்து இறைவனை வழிபட்டது இத்தலத்தின் தனிச்சிறப்பாகும்.

11. (பாங்கி கூற்று) கூழைக்கங்காளர் கறையரவு, அம்புலி சூடியவர், சதுர்மறையர். பாவமிணைந்த முப்புரமழித்தவர். அரவமாகவும் புலியாகவுமிருக்கின்ற பதஞ்சலி - வியாக்கிரபாத முனிவர்கள் போற்றும் ஈசர் - என்று ஓதுமவர் பால் உறையும் அரணாகிய நாமம் உடையவரே! அயன் இந்தத் தலைவியின் தலையில் வீணாகவன்றோ தன் எழுத்தை எழுதினான்.

அயனின் எழுத்தை மாற்ற உன் ஒருவனால் மாத்திரமே முடியும். முருகனின் 'கால்பட்டழிந்தது இங்கென் தலைமேல் அயன் கையெழுத்தே'- என்றார் அருணகிரி.

தொடிகைக்கு நீங்குந், துகிலிழந் தேங்குந், துயரினயர்
வடிகைக்கு நீலி யனையிவ ளாவி வலியவிடும்,
படிகைக்கு நீபெண் பழிகைக்கொ ளாதுகண் பார்த்தரு(ள்)எல்
விடிகைக்கு நீள்பொழில் சூழ்வர ராசையில் வித்தகனே. 12

வித்துரு மத்தனி மேனியர், கூழை விமலர்,கக
னத்துரு மத்தர், சிவசங்க ரேசர்,நண் ணார்விடுத்த
சத்துரு மத்த கயமுரித் தோர்,மலர்த் தாட்பணிசேர்
பித்துரு மத்தனை யோலிட் (டு)இயமன் பிடிப்பதின்றே. 13

---

12. (பாங்கி கூற்று) கையைவிட்டு வளையல் நீங்கும் ஆடை நெகிழும், அதனாலிவள் துயரில் அயர்வாள். அன்னையாகிய நீலியோ இவள் ஆவியை விடுமாறு கைத்துக் கூறுவாள். வித்தகனே! நீ பெண்பழி கொள்ளாமல் இரவு விடியுமாறு கண்பார்த்தருள்செய்க.

அனை - அன்னை. பழிக்கஞ்சியவன் இறைவன் என்பதை இங்கே நினைவூட்டினாள் தோழி.

13. கூழை விமலர், பவழம் போன்ற மேனியர். ஆகாயக் கற்பகத்தருபோன்றவர். சிவசங்கரனும் அவர், பகைகொண்ட யானையை உரித்தவர். அவரின் மலர்த்தாளைப் பணியும் பித்தனேனை - இயமன் ஓலமிட்டுத் தொடர்ந்து பிடிக்க மாட்டான்.

வித்துருமம் - பவழம். துருமம் - மரம்.

பிடிக்கும் பிடிமருங்(கு) ஓர்பாகன், கூழைப் பிரான்,கமல
அடிக்கும் பி(டு)இகம் பரநல்கும், வேல்விழி யாலுயிரைக்
குடிக்கும் பிடிநடை யாராசை தீர்க்கும், குறித்ததெலாம்
முடிக்கும், பிடிப்ப(து) எமக்கெந்த நாளினு முன்னிற்குமே. 14

முன்இலங் கேசன் புயமடர் கூழைமுக் கண்ணர்,விண்பூ
மன்னிலங் கேசவன் தேடரி யார்,மலர்த் தாள்பணியத்
தன்னிலங் கேசஞ் சரியச்சென் றாள்,சென்று தான்பெறலே(து)
என்னில்அங் கேசரி போகவில் வேடன்கை யேவைந்துமே. 15

---

14. கூழைப்பிரான் கைப்பிடி யென்ற அளவிலிருக்கும் இடையையுடைய உமையம்மையைப் பாகமாக உடையவன். அவனது கமலமலராகிய அடிகளைக் கும்பிடுவதே, இகம் பரம் என்ற இருபேற்றையும் தரும். பெண்யானையின் நடை கொண்ட, வேல்போன்ற விழிகொண்ட பெண்கள்பாலுள்ள ஆசையைத் தீர்த்திடும். குறித்ததனைத்தையும் நிறைவாக்கும். எமக்குப் பிடிப்பதும் – எந்த நாளினும் முன்னிற்பதும் அக் கமல மலரடிகளே யாகும்.

15. (செவிலி கூற்று) கூழைமுக்கண்ணர் முன்னாளில் இலங்கையரசனும் இராவணனின் புயவலியைக் குறைத்தார். விண்ணில் பறந்த பூவின் மன்னன் பிரமனும், நிலமகிழ்ந்த கேசவனும் தேடஅரியவர். கேசம் நிலத்தில் அவிழ்ந்திடுமாறு சென்றவள், பெற்றதெல்லாம் வளை நீக்கமும் - மன்மதன் மலரம்பு ஐந்துமே ஆகும்.

பூமன் – பிரமன். ஏதென்னில் அங்கே (வளை) சரிபோக – எனப்பிரித்தல் வேண்டும். வில் வேடன் - காமன். ஏ – அம்பு.

ஐயான னத்தன், வரராசை வாழும் அமலன், மலர்க்
கையான னத்தன் பணிசங்க ரேசன், கடுக்கையருள்
செய்யான், அனத்தன் விதித்ததிவ் வாறு, திகழ்பசலை
மெய்யான நம்தன்மை சற்றுமெண் ணரிந்த மெல்லியரே. 16

மெல்லிய ராக வரிவண்டு சூழ்குழல் மேருமுலை
வல்லிய ராக வசைபுகல் வார்முன், மதகளிறு
சொல்லிய ராகவ ஞேர்கூழைச் சங்கரர், துங்கவெற்பிற்
புல்லிய ரா(கு) அ மதிவிழுங் காமலென் போனதுவே. 17

---

16. (தலைவி கூற்று) வரராசை வாழும் அமலன் ஐந்து திருமுகங்களுடையவன். கையில் நந்து (வளை) உடையவன் பணியும் சங்கரன். தன்னை விரும்பும் எனக்குக் கொன்றை மாலையை அருளான் - அன்னவாகனத்தன் (பிரமன்) விதித்த திவ்வாறு போலும். மெய்யில் பசலை படர்ந்த தன்மையை ஏசும் இப்பெண்கள் நம் தன்மையைச் சிறிதும் எண்ணவில்லை.

ஆனனம் - முகம். கை ஆன நத்தன் - சங்கையுடைய மால். கடுக்கை - கொன்றை. அனத்தன் - தொகுத்தல்.

17. (தலைவி கூற்று) மதகளிரும் கஜேந்திரன் அழைத்த இராமர் (பெருமாள்) கூழைச் சங்கரர் மெய்யில் இணைந்துள்ள மலையில், மெல்லிய இசைபாடும் வண்டுகள் சூழ்ந்த குழலையும், மேருவைப் போன்ற முலையையும் கொண்ட பெண்கள் பழி கூறுமாறு, ராகு அந்தச் சந்திரனைவிழுங்காமல் ஏன் போனது?

அராகவசை - விரும்பாதபழி, இராகவன் இங்கே திருமாலாகவே எண்ணப்படுகிறார்.

போனகம் நஞ்சு புலித்தோ லுடைகொண்ட புன்னைவனத்
தா(ன்) அகம், நஞ்சு பணியாத ராவணன் றன்னையடர்
கால்நகன், அஞ்சு கணையா ளியைவென்ற கண்ணனெனும்
ஆனக னஞ்சுநுள் மெல்லோதி யாள்வர ராசையின்றே. 18

இன்தேன் அனைய தமிழ்வர ராசையி லெங்களருட்
குன்றே, னனைமலர்க் கோதைபங் கா,பவக் கூர்கடலிற்
சென்றே(ன்) அ(ல்)நைய நினதருள் மாரித் திவலைபட
நின்றேன் நனைய, வெனக்கெந்த நாள்வந்து நேர்படுமே. 19

---

18. (பாங்கி கூற்று) வரராசையில் கனமான கூந்தலை யுடைய தலைவி, இன்று தலைவனும் பெருமானை – நஞ்சுண வுடையான், புலித்தோலுடையான், புன்னைவனத்தான், அகம்நைந்து பணியாத இராவணனை அடர்த்த கால்நகத் தான், அஞ்சு அம்புடையோனும் மன்மதனை வென்ற கண்ணுடையான் என்று எடுத்துக் கூறி மகிழ்வாள்.

நாமம் கூறி மகிழல் என்பது இதன் பயன்.

19. தேனனைய தமிழ் பயில் வரராசையில் விளங்கும் அருட்குன்றே! தேன் நிரம்பிய மலர்க்கோதையின் பங்கனே! பிறவிக்கடலில் முழுகிய எனக்கு நினதருள்மாரித்திவலை, அஞ்ஞானம் கெடும்படி கிடைக்கும் நாள் எந்நாளோ! அருள் வாயாக.

பவம் - பிறப்பு. கூர் - மிகுதி - பிறவி மிகுந்த கடலாம் வாழ்வு எனல் நன்று.

படுத்திருக் கும்,தளிர்ப் பாயலே நீங்கிப் பதைபதைத்து
வடுத்திருக் கும்,துயி லாள்அயி லாளன்ன மாதுநல்லாள்
அடுத்(து)இருக் குங் கண் டறியா நினதுப தாம்புயத்தாள்
நடுத்(து)இருக் கும்பர னே,ராசை யாவுடை நாயகனே. 20

நேரா யனங்கன் பொருபோது எரித்திடு நெற்றிவிழி
யார், ஆயனங்கன்பு செய்கூழைச் சங்கரர்க் காருரைப்பார்?
நாரா(ய்) அனங்க(ள்) இவள்போ னடந்து நடைபழகும்
சீரா யநங்கள் குலதீப மால்கொண்ட செய்தியையே. 21

---

20. (பாங்கிகூற்று) பரனுகிய ராசை ஆவுடைநாயகனே! தளிர்ப்பாயலிலும் உறக்கம் வராமல் - பதைபதைத்து நிற்பவள் - உண்ணுமலும் உறங்காமலும் உள்ளாள். அம்மாது இருக்கு எனும் வேதமும் கண்டறியாத, நினது பாதத்தாமரைகளே எப்போதும் நினைந்திருப்பவள். அவள் நடுங்குதல் நன்ருே.

21. (நாரை விடுதூது) நாராய்! அன்னங்கள் இவள் போல் நடந்து நடைபழகும் சிறப்பமைந்த எங்கள் குலவிளக்கான தலைவி, காமமயக்கம் கொண்ட செய்தியை, நேராக நின்று போர்செய்த மன்மதனை எரித்திடும் நெற்றிவிழியுடையவர், ஆயனும் திருமால் அன்புசெய்திடும் கூழைச் சங்கரருக்கு யாருரைப்பார்?

அனங்கள்— அன்னங்கள். அனங்கன்-அங்கமில்லாதவன்.

செய்ய அம் போருக மென்முலே மீதிரு சேல்விழிகள்
பெய்யஅம்பும் ஒருக மான(து), இராவெனும் பெண்கொடியார்
வெய்யவம்(பு) ஒருக, மூவெயில் மேல்மக மேருவளைத்(து)
எய்ய,அம் போருகந் தாய்,கூழை வாழ்சங்க ரேசுரனே. 22

சுரர்ஆசை யால்வந் தனுதினம் போற்றுந் துணைப்பதத்தார்,
வரராசை ஆவுடை மாதுபங் காளர், வணங்கியசெங்
கரர்,ஆசை யாவு (ம்)ஒழித்தருள் கூர்கறைக் கண்டர்,கங்கா
தரர்,ஆசை யாடை யுடையாரென் ருல்வினை தானறுமே. 23

---

22. (பாங்கி கூற்று) முப்புரமழிக்க, மேருமலேயை வளைத்து அம்பெய்யும் போருகந்த கூழைவாழ் சங்கரேசுரனே! சிவந்த தாமரை மொட்டுப்போன்ற மென்மையான தனங்கள் மீது, இருசேல் போன்ற விழிகள் அம்(நீர்)பெய்ய ஓர்உகமாக (யுகம்) இராப்பொழுது நீண்டது. பெண் கொடியார் (கொடுமை நிறைந்தவர்கள்) கூறும் கொடிய வம்பு மொழிகளேயும் ஓர்ந்துகொள்.

இவற்றிலிருந்து மீள இவளுக்கு உன்னருளைத் தருக என்றவாறு. பெய்ய வம்பென்பது - அம்பு பெய்ய என மாற வேண்டும்.

23. தேவர்கள் ஆசையுடன் நாளும் வந்து போற்றும் இரண்டாகிய திருவடியுடையார், வரராசையென்ற இவ்வூரின் இறைவியாம் ஆவுடைமாதினைப் பாகங் கொண்டவர், வணங்கும் செங்கரமுடையோரின் ஆசையாவையும் நிறைவேற்றுபவர், அருள்சிறந்த கறைக்கண்ட முடையவர், கங்கையைத் தரித்தவர், திசையையே ஆடையாக வுடையவர் என்றெல்லாம் துதிக்க வினைதான் நில்லாது நீங்கிடும்.

ஆசை-திசை. அணங்கார் பாகனை ஆசைதொறும்உற்றுப் பூசைசெய்பவன் – வாலி என்றது நோக்கலாம். (கம்பர் 4101)

அறு(கு)ஆர் அர(வு) அணி தென்கூழைவாழும் அமலர்,முன்னங்
குறுகார் அரணம் எரித்தோர், பதமலர்க் கோகனகம்
பெறுகார் அரவத் திரைபோற் கலங்குமென் பேதைநெஞ்சே!
மறு,கார் அரமன்ன வார்குழற் கூர்விழி மாதரையே. 24

மாதரை யம்பர மாலயன் தேடு மணிமுடிப்பொற்
பாதரை, யம்பரம் நல்குதென் கூழைப் பதியுகந்த
நாதரை, யப்(பு) அர மைவிழி பாகரை நான்தொழுதிப்
போ(து)அரை யம்பரம் போய்வளை போய்க்கண்
[பொருந்திலனே. 25

---

24. கடலலை போல் கலங்குமென் பேதை நெஞ்சே! மேகமென்ற கூந்தலை, அரமன்ன விழியுடைய மாதரை (நினையாதொழி) மறுத்துவிடு. அறுகு, ஆத்தி, அரவென்ற இவற்றை அணிந்த தென்கூழை அமலனைக் குறுகி, முப்புர மெரித்த பதமலர்களாம் தாமரையைப் பெற்றிடு.

உறுவது பெருது இடர்ப்படும் நெஞ்சைப் பேதை நெஞ் சென்றது பொருத்தமே.

25. (தலைவி கூற்று) பெரிய பூமியிலும் ஆகாயத்திலும் சென்று, மாலும் அயனும் தேடிய மணிமுடியையும், பொற் பாதத்தையுமுடையவர். முத்தியைத் தரும் தென்கூழைப் பதி வாழ்பவர். அம்பென - அரமெனக் கூர்மையுடைய மைதீட்டிய விழியுடையவளைப் பாகத்தில் கொண்டவராகிய பெருமானை நான்தொழுது - இப்போது ஆடைபோய் வளைநழுவிக் கண்துயிலாது வருந்துகின்றேன்.

மா - தரை எனப் பெரிய பூமிப்பரப்பு குறிக்கப்பட்டது. அம்பரம் - ஆடை.

பொரஇயந் தான் ஒலிபொங்க,வில்வேள்வரும்போதுநின்னைப்
பரவி,யந் தாதகி கேட்குமென் பேதை,கண் பார்கருணா
கர!வியந் (து)ஆதரி யாநின்ற பேர்நின் கமலபதத்
திரவியந் தாவென நல்குந்தென் கூழைச்சிவக்கொழுந்தே. 26

கொழுந்தாம்மதிக்குழவிக்கூற்றம்ஆவியைக்கொள்ளைகொள்ள
எழும்தா மதிக்குங் கொலோ,வர ராஸைசயெந் தாய்,இதழிச்
செழுந்தா மம்திக்கு(உ)டை யாய்,கலை போய்வளை
[போய்த்தியங்கி
அழும்தா மதிக்குநின் னம்புய மாலை யணங்கினுக்கே. 27

---

26. (பாங்கி கூற்று) கருணாகரனே! உன்னை வியந்து போற்றும் அன்பர்கள், பாதமாகிய செம்பொருளைக் கேட்பர்கள்; அவர்களுக்கு அருள் செய்யும் நீ; வர்த்தியமொலிக்கப் போர் செய்ய - வில்வேள் (மன்மதன்) வரும்போது-நின்னைப் பரவி அழகிய ஆத்திமாலையை என் பேதை கேட்பாள் - அவளுக்கும் அருள்செய்திடுக.

கமலபதத்திரவியம் - திருவடிச் செல்வம்.

27. (பாங்கி கூற்று) வரராசை யெந்தாய்! இதழி மாலை யுடையாய் - திசையாடையுடையாய்! மதிக்கொழுந்தாகிய எமன் ஆவியைக் கொள்ளை கொள்ள எழும். தாமதிக்கவா செய்யும்? (ஒருகாலுமில்லை) கலையும் வளையும் இழந்து நின் அம்புயமாலையை மதித்துத் தாவெனும்அணங்கிற்கு அதனைக் கொடுப்பாய்.

அம்புயமாலை - அழகிய தோளில் விளங்கும் மாலை.

கேள்,அர வாசனன் சேய்ஊரு(ம்) தென்றல்கிட் டாது,மணிச்
சாளர வாச லடையா ததுமொரு சற்பனே,கங்
காள,அ வாச மலர்ப்பதத் தோரெனக் கற்றவரை
ஆள்அர, வாச மெனராசை வந்த அருட்கடலே. 28

கடவா ரணம்உரித் தோன்,வர ராசையிற் கண்ணுதல்,வெண்
குடவா ரணமென் குழைக்கா தழகன், குழகனடி
தட(வு)ஆ ரணமுடி யானளித் தான்,மலர்த் தாமமினி
அடவா ரணமத னு,பார்க்க லாம்உன (து)ஆண்மையுமே. 29

---

28. (தலைவி கூற்று) வரராசையை வாசமெனக்கொண்ட அருட்கடலே! கங்காள அரனே! வாசமலரென்ற பதமுடைய பெருமானே என்னும் கற்றவர்களை ஆளும் அரனே! இதனைக் கேட்பாயாக.

அரவிருக்கை உடைய திருமாலின் மகனும் மன்மதன் ஊர்ந்துவரும் தென்றல் நுழையாதபடி மணிச்சாளரவாசலை அடையாதது என்ன வஞ்சனை?

அரவாசனன் - பாம்பிருக்கையுடையோன் - திருமால்.

29. (தலைவி கூற்று) வரராசையின் கண்ணுதற்பெருமான், மதமொழுகும் யானையை உரித்தவன், வெண்மையான குடம் போன்ற சங்கக்குழை காதணி அழகன், இளமையானவன், அவனடி தேடும் வேதங்களின் முடியானவன். அவன் மலர்த் தாமத்தைத் தந்தருளினான். மன்மதனே! போரில் வல்லவனாகிய நீ இப்போது என்னை அட (வருத்த) வரலாமே!

தடவு ஆரணம், அட வா - ரணமதனு என்று கொள்ளல் வேண்டும்.

மேகத் (து)அளவு குழல்,வே லிணைவிழி, மென்றளிரின்
ஆகத் (து)அளவு நகையாரை யான்விட் டகன்று,பொழின்
மாகத் (து)அளவுயர் சீராசை நாதர் மலர்ப்பதத்திற்
போகத் த(ஸ்)ள,வுளம் எந்நா ளெனக்குப் பொருந்துவதே. 30

பொருந்தந்தி ஆனனன் தந்தை,தென் கூழைப் புனித
[னென்றும்
இருந்தந்தி யான மியற்றுநல் லோ(ர்)இத யாரவிந்தம்
திருந்(து)அந்தி யாக(ன்) இதழிநல் கான், எங்கள் செய்ய
[குலக்
குருந்தந்தி யாகங் கொடுத்தாள் இருகைக் குருகையுமே. 31

---

30. மேகம் போன்ற கூந்தல், வேலென்ற விழி, தளிர் மேனி, முல்லை யரும்பனைய பற்கள் என்றிவையுடைய பெண்களை விட்டகன்று போகும்படியும், வானளாவிய பொழில் சூழ்ந்த சீராசை நாதர் மலர்கழலில் என்உள்ளம் புகும்படியும் செய்ய உனக்கு எந்நாள் உள்ளம் பொருந்துமோ!

அளவு - இயல்பு. தளவுநகை - முல்லைப்பல். ஸ்ரீராசை - சீராசை. அவனருளாலதானே அவன்தாள் வணங்கமுடியும்.

31. (பாங்கி கூற்று) ஆனைமுகத்தவனின் தந்தை, தென் கூழைப் புனிதன், நினைவாரிதயத்திலிருக்கும் அந்திவண்ணன்- எங்கள்குலக் கொழுந்து; இருகை வளையலையும் தியாகமாகக் கொடுத்தும் கொன்றை மாலையைத் தரவில்லையே!

பொரும் தந்தி ஆனனன்-போர்செய்யும் ஆனை முகமுடையவன். இதயாரவிந்தம் - மனமலர். 'மலர்மிசை ஏகினான்' என்பார் திருவள்ளுவர். குருந்து - குருத்து, கொழுந்து.

குருக்குங் கலாமதிக் கீற்றுவெங் கூற்றங் குடதிசையில்
இருக்குங், கலாப மயிலனை யீர்! என்னை யீன்றநற்ரு
யருக்குங் கலாமனங், காணர்கண் ணீரும் அணிந்தசந்தப்
பொருக்குங் கலார விழிபாகர் கூழைப் புராந்தகரே. 32

தகரம் புனைகுழல் ஆவுடை மாது தழைத்தவள
நகரம் புனைவன நாயக னே,முன் னமன்படரை
நிகரப்(பு) உனையும் பொருததன் ரே,பொன் னெருங்குழலைச்
சிகரம் புனையும் சிறுமருங் காண்மயல் தீர்ந்திடவே. 33

---

32. (தலைவி கூற்று) நிறமுடைய கலைமதியின் கீற்று வெங்கூற்ருகி மேற்றிசையில் இருக்கும். தோகையுடைய மயிலனையீர்! ஈன்ற நற்ருயருக்கு மனம் கல்லாக விருக்கும். குவளைமலர்க் கண்ணிபாகன் - கூழைப்புராந்தகன். சந்தனப் பொருக்கையும் கண்ணீர்ப் பெருக்கையும் காணுதவராயிருக்கிருர். நான் செய்வதுதான் என்ன!

குரு - நிறம். மதிக்கீற்று - பிறை. இதனைக் மேற்றிசைக் கூற்றமென்ருள். கலாம் - கல்லசம் என்பதன் தொகுத்தல் விகாரம். கல்லாரம் - குவளை. புராந்தகர் - புரமழித்தவர்.

33. (பாங்கி கூற்று) மணப்பொருளாம் மயிர்ச்சாந்தை யணிந்த ஆவுடைமாது பெருமை பெற்றிருக்கும் புன்னைவன நாயகனே! முன்பொருகால் யமதூதரை ஒத்த மன்மதனது அம்பு உன்னையும் பொருதது தானே! சிற்றிடையுடையாள், பொற்றைமலையுடையாள் மயல் தீருமாறு அருளுக.

மாதர் நல்லார் வருத்தம் அது நீயும் அறிதி அன்றே - என்ருள். தகரம் - மணப்பொருள். வளநகரம் - புன்னைவனம் - (இ)ராசைநகர். நமன்படர் - நமனின் ஏவலனை காலன்.

வேலா வலைய விடம்அமு தாக்கும் விமல,திரி
சூலா, வலைய முலைமருங் காவுடைத் தோகையனு
கூலா, வலையம்பு அயில்வா ளனையகட் கோதையர்தம்
பா(ல்)ஆ வலையகன் றெந்தா ளடைவனின் பாதத்தையே. 34

பாதார விந்த வரராசை முக்கட் பரம,வணங்
காதார் அவிந்(து) அரணங்களுந் தூள்படக் காய்ந்தநகை
யா,தார விந்தழ லாமு(ன்)நல் காய்,பொன் னணங்குமுலை
மீதார விந்த விரகா னலத்தின் வெதும்புவளே. 35

---

34. கடலில் தோன்றிய விடத்தையே அமுதாக ஏற்றவனே! விமலனே! திரிசூலங்கொண்டோனே! வல்லென்ற முலையையும், ஐயமான இடையையும் உடைய தோகையனைய உமையிடம் அன்புசெய்பவனே! வலை, அம்பு, அயில்வாளனைய கண்ணார் பால் சார்ந்தும், வலையென்ற பெண்ணாசையி லுழந்துமிருக்கும் நான் எந்நாள் அதனையகன்று நின் பாதத்தை அடைவது!

வேலை - கடல். வேலாவலையம்–கடல்சூழ்ந்த நிலம். விடம் அமுதாக்கினவன்-ஆலமே அமுதமாகிய அற்புதம்செய்தவன். வலைய - வல், ஐய, முலை மருங்குடன் நிரல் நிரையாக இயைந்தன.

35. (பாங்கி கூற்று) வரராசை முக்கட்பரம! பாதத் தாமரையா! வணங்காத (முப்புராதியர்) வர்களின் அரணங் களைத் தூள்படச் சினந்து பொடித்த நகையாள! தேமலணிந்த வருத்தும் முலையினளாம் தலைவி, பிரிவுத்தழலால் வெதும்பு கிறாள். வெள்ளிநிலவு அவளைவருத்தும்முன் நீஅருள்செய்திடுக.

வணங்காதார் அவிந்து, தூள்படக் காய்ந்த நகையா என்க. தார இந்து – வெள்ளி நிலவு. விரகானலம் – பிரிவுத் தீ. அணங்கு முலை - இடையை வருத்தும் தனம் என அமையும்.

4590



புவனச் சராசரந் தா(ன்) ஆகுங் கூழைப் புனித(ன்),இரா
கவ(ன்)நச் ச,ராசத மின்றியன் ரேர்கதி ராழியளித்
தவ(ன்),அச் சராசன வேள்போர் விலக்கிலன், தையல்சிவ
சிவநச் சராவு(ம்) இலேயோ எனுமிளந் தென்றலுக்கே. 36

தென்மலே யத்தமிழ் தேர்வர ராசையிற் செல்வ,ருயர்
பொன்மலே யத்த மிசைதரித் தோர்,புண்ட ரீகன்புட்பா
கன்மலே யத்த(ம்) இருதா மரையருள் காரணர்,கா
மன்மலே யத்தமி யேற்(கு) அரு ளார்கொன்றை மாலேயுமே. 37

---

36. (பாங்கி கூற்று) அசையும் பொருளும் அசையாப் பொருளும் நிறைந்த புவனமே தாஞகிய கூழைப்புனிதன், இராகவனும் திருமால் கோபமின்றிவிரும்பியபோது (வழிபட்ட போது) கதிராழி அளித்தான். மன்மதனின் போரை இன்று விலக்கிலன். இளந்தென்றலேயுண்ணும் நச்சரவும் அவனிடம் இல்லேயோ! சிவசிவ - இவன் இப்படி இருப்பது ஏனே என்பாள் இவள்.

சராசரம் - சரம் அசரம். இராகவன் ராசதமின்றி நச்ச - என மாற்றுக. சராசனம் - வில். சிவசிவ! இரக்கக் குறிப்பு. நச்சரா - நஞ்சுடைப் பாம்பு.

37. (தலேவி கூற்று) தென்மலேயில் பிறந்த தமிழை ஆயும் வரராசையின் செல்வனும் பெருமான், பெருமைமிகுந்த பொன்மலேயைக் (வில்லாக) கையில் கொண்டுள்ளவன், தாமரைமேலிருப்போன் (பிரமன்) தாமரைக் கண்ணன் (திருமால்) இருவரும் சூடிக்கொள்ளத் தம் தாளாகிய தாமரை தந்தவன். மன்மதன் போர் செய்யவும் கொன்றை மாலேயை அடியேற்கு அருளார். இது ஏனே!

பொன்மலே - மேருமலே. அத்தம் - ஹஸ்தம். தாமரை யாளர்களுக்குத் தாமரை தந்தான். எனக்குக் கொன்றை கூடத் தரவில்லேயே என்ருள்.

மா(ல்) அயிராவணப் பாகன், பணிவர ராசைநம்பர்,
வேலைஇராவணற் செற்றோர்க்கு இறையவர், வெற்பில்வெய்ய
பாலைஇராவணப் பைங்கோதை சென்றனள், பார்க்கினங்கோர்
சோலை இரா, அணற்(கு) எவ்வாறு பின்பு தொடர்ந்தனளே. 38

தொடரும் பலபிணி தீரநெஞ் சே! யொன்று சொல்குவன்கேள்,
இட(ர்)உம் ப(ல்)அபய மென்னுமுன் காத்தவ(ன்)ஏத்தும்,
[விண்மேற்
படரும் பலவு புடைசூழுங் கூழை பரவு, பிறை
அடரும் ப(ல்)அதுக் கியம(ன்)நம் மேல்வர அஞ்சுவனே. 39

---

38. (செவிலி கூற்று) பெருமை மிகு அயிராவணமுடைய இந்திரன் பணியும் வரராசைப் பெருமான், கடல்சூழ்ந்த இலங்கை அதிபன் இராவணனைச்செற்றவனும் இராமனுக்குத் (திருமாலுக்கு) தலைவன். இவனுடைய மலையில் பாலைநிலத்தில் இரவுவண்ணக் கூந்தலை யுடையாள் சென்றனளே! பார்க்கப் போனால் அங்கு சோலையிராது. அண்ணலை அவள் எவ்வாறு பின்தொடர்ந்தாள் ?

மால் அயிராவணப்பாகன் - இந்திரன். இராவணம் - இரவுவண்ணம். அணற்கு - அண்ணலுக்கு.

39. தொடரும் பலதுன்பங்கள் தீர நெஞ்சமே! ஒன்றைச் சொல்வேன் கேள். இடரிலிருந்த யானை (முதலை பற்றினமை) அபயமெனக் கூவும்முன் அதனைக் காத்தவன் (திருமால்) ஏத்தும் பெருமையாளன், விண்மேல் பரவிய பலா நிறைந்த கூழைப் பதியான் அவனைப் பரவு, பிறைபோன்ற பற்களை கோபத்தால் வெளிப்படுத்திக்கொண்டு யமன் நம்மேல் வர அஞ்சுவான்.

உம்பல் - யானை. பலவு - பலா - உகர விகுதி செய்யுளில் பெறும். பலதுக்கி - பல் அதுக்கி - கோபமெய்ப்பாடு.

அஞ்சம் அனைய உமையாள்பின் னேகி(ன்) அசலம், முந்நீர்
கஞ்ச மனையவள் பின்னேகின் ஏகு, கலங்குவதென்
நெஞ்சம்? அனை,யயன் மால்பணி கூழை நிமலர்வெற்பில்
வெஞ்ச மனையடர் கண்ணளு(ம்) அவ்வண்ண மேவுவளே. 40

மேவிய கங்கை புனையும் பிரான்,மலர் வேதிய,னூன்
பாவிய கம்கையி(ல்) ஏற்றிரந் தோன்,மென் பணிலம்வராக்
கூவிய கங்(கு) அயல் ஆரஞ் சொரிதரும் கூழைசென்று
அவாவி ய கம்கை, மடவார் கலவி மயக்கத்தையே. 41

---

40. (கண்டோர் கூற்று) அன்னையே! அன்னம் போன்ற உமையவள் (மணந்து சென்ற)பின் இமயமலை ஏகியிருந்தால், திருமகளின் பின் பாற்கடல்சென்றிருந்தால் நீயும் தலைமகளின் பின் சென்றிடுக. அயனும் மாலும் பணியும் கூழை நிமலர் வெற்பில்; யமனைப் பொரும் கண்ணுடையாள் தலைவன்பின் சென்றாள். இதற்குக் கலங்குவ தென்னோ!

அசலம் - மலை. கலங்குவதென்நெஞ்சம் - அனை - அன்னையே! மலைக்குச் சந்தனமும் கடலுக்கு முத்தும் யாழுக்கு இசையும் பயன்படுமோ! என்ற கலித்தொகை இணைப்பாகும் இங்கே.

41. நெஞ்சமே! கங்கை மேவிய பெருமான், பிரமனது தலையோட்டில் பலிஏற்றவன். சங்கங்கள் முழங்கி முத்தீனும் கூழையினைச் சேர்ந்து அதனையே விரும்பு. மடவார் கலவி மயக்கத்தை வெறுத்திடு (கை - வெறுப்பு)

ஊன்பாவிய கம் - தசைநிறை தலையோடு. கங்கயல் - கங்கு - கரையின் அயல் - பக்கத்தில். சென்றவாவி - சென்று அவாவி. அகங்கை - அகமே கைப்பாயாக.

மயங்கத் தரா தல மங்கையர் கைப்பலி வாங்குமணிப்
புயங்கத் தர்,ஆதவன் பல்லுகுத் தோர்,வரைப் பூவைமுலை
முயங்கத் த(ர்)ஆதர வுண்டு,தென் கூழையின் முத்தமிழ்
[கொண்டு
இயங்கத்தராதவர் பா(ல்)நெஞ்ச மேயென்கொ(ல்)ஏற்பதுவே.

ஏற்றின(ன்), நாக வனத்தன்முன் போயிவ் விளம்பிறைவெண்
கீற்(று)இன ஞக அனத்தந் தரு,மென் கிருபையொடு
சாற்(று),இன ல்நாக வனத்ததத் தாய்,சம்ப ராரிவந்து
தோற்றின ஞக வனத்தவ ளாருயிர் சோருமென்றே. 43

---

42. புவிமகளிர் மயங்குமாறு அவர் கைப்பலி வாங்கும் மணிகளுடைப் பாம்பணிந்தவர், (தாருகாவன முனிபத்தினியர் கருவம் அழித்தது) சூரியனின் பல்லைத் தகர்த்தவர். (தக்கன் யாக நிகழ்ச்சி) மலைமகளின் முலை தழுவும் பெருமானின் ஆதரவு இருக்க நெஞ்சமே! முத்தமிழ்கொண்டு ஈயாதவர்பால் அலைவது ஏன்? அலைந்து ஏற்பது எதனை?

முதல்வரி, மங்கையர் மயங்கத் தராதலத்தில் கைப்பலி வாங்குவோன் - என மாறி அமையும். ஆதவன் பல்லுகுத் தோன் - குடக்கு ஓடுவான் எயிறு கொண்டவன் சிவன்.

நிதிக்குப் பிங்கலன் - பதத்துக்இந்திரன் - நிறத்தில் கந்தனென்றுகூறினும் கொடுக்காதஉலோபிகளை அணுகாதே! என்றார்.

43. (கிளிவிடுதூது) கிளியே! ஏற்றையுடைய நாக வனத்தன் முன்போய், இளம்பிறையான வெண்கீற்று சூரியனைப் போல் வருத்தம் தருகிறது. மன்மதனும் வந்து விட்டான். கவலையால் இவள் ஆருயிர் சோருகிறது என்று கருணையொடு சாற்றுவாய்.

சோர்வரு மந்த ரதியனை யாள்கொண்டு, தோகையன்னீர்!
தேர்வரு மந்த ரவிவரல் பார்குந்தென் கூழையிற், புள்
ஊர்வரு (ம்), அந்தர நாதனும் போற்ற வுருகியருள்
கூர்வரு மந்தரத் திண்புய மாலை கொடுத்திலரே. 44

கொடுங்கலி யா(ல்)நைநெஞ்சே!யெறிவான்பவக்குன்றினைவே
ரொடுங்கலி யானை உகைத்தோன், தென் கூழைஉகந்த பிரான்
கடுங்க(ல்)லி யானை கரும்புணக் கண்டவன், காசினிசூழ்
நெடுங்கலி யா(ம்)நய னத்திபங் காள(ன்)என் நித்தமுமே. 45

---

கீற்று இனனுக அனத்தந்தரும் - பிறை சூரியனுக வருத்தம் தரும். நாகவனத்த தத்தாய் - நாகவண்ணத்துக் கிளியே.

44. (பாங்கி கூற்று) தோகையனையீர்! அருமருந்தன்ன ரதியனையவள் சோர்வு கொண்டு, சூரியன் வருகையைப் பார்க்கிருள். தென்கூழையில் - புள்ளூர்தியுடைய (கருடன் - திருமால், அன்னம்-பிரமன்) வர்களும், இந்திரனும் போற்ற - உருகியருளும் பெருமான் தன்புயமாலையை இன்னும் கொடுத்திலன்.

அருமந்த - அருமருந்தன்ன என்பதன் போலி. அந்தர நாதன் – இந்திரன். மந்தரத் திண்புயம் - மேருமலையனைய தோள்.

45. துன்பத்தால்வருந்தும்நெஞ்சே! பிறப்பாம் மலையை வேரொடு கல்லும் பெருமான்; இடபமுடையோன், கூழை நகரை உவந்தவன், கல்யானை கரும்புணக் கண்டவன், நீண்ட ஒலிநிறை கடலனைய கண்ணுடையவளின் பங்காளன் என்பாயாக நித்தமும், கவலைகள் அகன்றிடும்.

கலியால் நை நெஞ்சே! என்பது விளி. கலியான் - கல்லி யான். கலியானை - கல்யானை. கலிஆம் நயனத்தி - கடலனைய கண்ணள்.

நித்தம் பயிலர, தென்கூழை வாழு நிமல,மத
மத்தம், பய்இல(கு) அர(வு) அணிந் தோய்,மத வேள்விடுத்த
கொத்(து)அம்(பு) அயில வருமா வியை,மைக் குவளைவிழி
தத்(து)அ(ம்) பை,யில விதழியெவ் வாறு தரித்திடுமே. 46

இடுவந்தி யாயுரைக் கும்,பனி நீரென் (று)இறைப்பர்வெந்நீர்
கொடுவந்தி யாழ்மொழி நல்லார் பொருங்கொடி
[யோனை, யின்னும்
அடு,வந்தி யாநின்ற பேர்க்கருள் கூழை யமல,வசைக்
கடுவந்தி யார்பொருப் பார்?வெறுப் பாமிடுங் கைவந்தியே.47

---

46. (பாங்கி கூற்று) நிருத்தம் பயின்ற அரனே! தென் கூழைவாழும் நிமலனே! மதமத்தத்தையும், படம் விரியும் அரவையும் அணிந்தவனே! மதவேள் விடுத்த கொத்தாகிய (ஐந்தென்ற) அம்பு இவள் ஆவியை உண்ண வரும். இலவ மலரென்ற மென்மையுடைய தலைவி, விழிநீரை எப்படிப் பொறுத்திருப்பாள் - சொல்க.

நித்தம் - நிருத்தம். மத்தம் - ஊமத்தம் - தலைக்குறை பயிலகர வணிந்தோய். பய் (பை) இலகு அரவு அணிந்தோய். பை - படம். விழி தத்தும் அம்பு - கண்ணில் பெருகும் நீர். இதழி - அன்மொழித் தொகை.

47. (தலைவி கூற்று) வந்திப் போருக்கருளும் கூழைய மலனே! என்மேல்போர் தொடுக்கும்கொடியவனை (மன்மதனை) அடு (கொல்க) வசைக் கடுவை (விஷத்தை) யார்தாம் பொறுப்பர். தோளணியும் வெறுப்பாயிற்று. இடுவந்தியைத் (பழிச்சொல்) தாயே கூறுகிருள். பனி நீரென்று கூறி வெந்நீரைக் கொண்டுவந்து யாழ்மொழிநல்லார் என்மேல் இறைப்பர். இவைகளைத் தடுத்து என்னைக் காத்திடுக.

இடுவந்தி – வசைச்சொல். கைவந்தி - தோளணி.

வந்திக்(கு) அ(ம்)அலங்(கு) அவிர்சடை மேல்வையை மண்
[சுமந்தோர்!
நந்(து)இக் கமல மணிசொரி கூழையி னம்பர்,மதத்
தந்திக்(கு) அ(ம்) அலங் கலையொழித் தோன், பணி சங்கர
[ரென்று
உந்திக் கமல(ம்) உதித்தோன் விதிப்ப(து) ஒழிநெஞ்சமே. 48

ஒழியா(ய்) இரங்கலை, ஓவிய மே,என் றுரைத்துஉதவீர்
விழியா யிரம்படைத்த தோன்,பணி கூழை விமலர்பைந்தார்
பழியா(ய்) இரண்டு மருப்போதுஒருத்தனைப்பார்ப்ப தென்,மால்
வழியா யிர்அந்தக ன்நீரன்றின்றி வேறில்லை மங்கையரே. 49

---

48. நெஞ்சமே! உந்திக் கமலத்தில் வந்தவன் (பிரமன்) விதிப்பதை ஒழிக்க; வந்திக்கிழவிக்கு கங்கை தாங்கிய சடையில் மண் சுமந்தவர், சங்கும் கரும்பும் முத்தினும் கூழைப்பெருமானுர், மதகளிறு நீரில் நின்ற வருத்தத்தைப் போக்கிய திருமால் போற்றும் சங்கரர்-என்று பன்முறை கூறு.

பெருமான்நாமம் பிறவியகலத் துணையாகும்.

49. (பாங்கி வெறிவிலக்கியது) மங்கையரே! இந்திரன் பணியும் கூழை விமலரின் தாரை வாங்கி, இரங்கலை ஒழி - ஓவியமே என்று கூறி உதவிடுவீர். அதுபோக; பழியாய் இரண்டு கொம்புடைய ஆட்டினைப் பார்ப்பது (வெட்ட) ஏனோ! மால் வந்த வழி ஆயாமல் இரக்தம் நீவிர் இந்த ஆட்டுக்கு யமனே தவிர வேறில்லை. நீங்களும் அந்தகரே (குருடரே) என்றது அழகிது.

ஒருதனை - ஒரு என்றால் ஆடு. 'ஒருத்திக்கு ஒருவன் பகை யோ' – என்பது தனிப்பாடல்வரி.

நற்ருய் - செவிலித்தாய் - பாலூட்டும்தாய் - ஒலுறுத்தும் தாய்-கைத்தாய், ஐவரையும் மங்கையரே என்று விளித்தாள்.

மங்கைக்கு வாம மளித்தருள் கூழை வரத,இளங்
கொங்கைக்கு உவாமதியொன்ருேபகை,யொருகோடி
[கெட்டேன்
சங்கைக் குவாமங்கை பெற்ருள் அவள்பெற்ற தானை,யிவள்
அங்கைக்கு; வாம மணல்சிறு கூட லளித்ததுவே. 50

அளித்தடங் காவி யலர்விழி யாவுடை யம்மைபங்கர்;
நளித்தடங் காவியல் சார்கூழைச் சங்கரர், நாட்டெழுகார்
களித்(து) அடங் காவிய மன்காண்,அதைக்கடுந் தேர்விடுத்தே
த(ள்)ளித் தடு,அங்கு ஆவி அருள்வலவா,வொருதையலுக்கே.

---

50. (பாங்கி கூற்று) உமாதேவிக்கு இடப்பாகத்தை அளித்தவரதனே! இளைய தனங்களையுடையாட்கு;மதியொன்று தானே பகை. வேறு பகைகள் கோடியுண்டு. இவள் வளைகளை பூமிப் பெண்ணாள் பெற்ருள். (நழுவி விழுந்தன) அவளுடைய தானை (கடல்) இவள் சுழி (கூடல்) எழுதுமாறு மணலினை அளித்தது. கு- பூமி. அவள்தானை-கடல். நீராருங் கடலுடுத்த நிலமடந்தை என அறிக.

51. (மீளும் தலைவன் பாகனொடு மொழிதல்) வண்டினையும், தடத்தில் அலகும் காவிமலரையும் ஒத்த விழியுடைய அம்மையைப் பங்கிலுடையோனின் குளிர்ந்த தடமும் காவும் நிறைந்த நாட்டில், மேகம் களித்து அடங்காத இயமன் என வரும். தேர்ப்பாகனே! அதனைத் தள்ளித் தடு. தையலுக்கு ஆவி அருள். (விரைந்து செலுத்துக தேரை-என்பது பொருள்) அளி - வண்டு. நளிதடங் கா - குளிர்ந்த குளம்சோலை. தளி - தள்ளி - தொகுத்தல் விகாரம். தடு அங்கு ஆவி அருள் எனப் பிரிக்க.

தையல் அருந்தளிர் மேல்சரு கா(ம்)இவள் தன்னுயிரை
மையல் அருந்த லறுவதென்? நாண்மதி போ(ல்)ஒளிரச்
செய்அ லருந்தண் கமலமுத் தீனும்தென் கூழைப்பிரான்
கைய லர்உந்த வருமுனம் வே(ள்)தனைக் காய்ந்தவனே. 52

காயம் தகன முறுமுனம், ஆவிகைக் கொள்ளநம்மை
ஆ(ய்)அந் தகன் அமர் செய்யாமுன், கூழை யானைமதம்
போய்அந் தகனவ னென்ன,வெய் யோன்கண் பொதுத்தவனை
நேயந் தகநளி னத்தான் பணிய நினைநெஞ்சமே. 53

---

52. வயலில் மலரும் தாமரை மதிபோலொளிரும் முத்தையீனும் தென்கூழைப் பிரான், மன்மதனைக் கோபித்தவன் கையிலுள்ள மலர்களை, வேள்வந்து உந்தும் முன்பாக இவளைக் காத்திடுக. தளிர்ப்பாயலின்மேல் காமவெப்பத்தால் சருகானாள் தலைவி. மையல் நீங்குவது எக்காலம். மையல் அருந்தல் அறுவது எந்நாள் எனப்பிரிக்க.

53. (பாங்கி கூற்று) கூழையானை, குருடன் என்னுமாறு சூரியனுடைய கண்ணை ஒளிகெடச் செய்தவனை, நேயத்துடன் நளினத்தில் வாழும் திருமால் பணியும் தன்மையனை, காயம் எரிபடுவதற்கு முன்னே; உயிர்கொள்ள அந்தகன் வந்து போர் செய்யாமுன் நெஞ்சமே! மதமொழிந்து நினைப்பாயாக.

நளினத்தான் – எனத் திருமாலுக்குக் கொள்வதைவிடப் பாடலமைப்பில் நளினத்தாள் என இருப்பின் - பணிய நினை நெஞ்சமே என்பதனுடன் எளிதில் இணையும்.

நினைவா(ர்) இதய நிறைந்திருப் பார்,புன்னை நீழலுற்றோர்
கனைவாரி தன்னில் விடம்வாரி யுண்டருள் கண்டர்,வெற்பில்
என்நைவுஆர் இதமுற வேயுரைப் பார்,பச் சிளங்கிளிகாள்!
தினைவா(ர்) இதணில் சிலநா ளிருந்த திருந்திழைக்கே. 54

இழையா வையுமிழந் தா(ள்)என்செய் வாள்,இரங்(கு)
[ஆள் கருணை
மழையாவை யுற்பல மைவிழி பால்,வர ராசையெந்தாய்
தழை ஆவை யுன்னத வெற்பால் மழையைத் தடுத்(து)
[அளித்தோன்
குழையா,வை யுற்ற கதிராழி வேண்டக் கொடுத்தவனே. 55

---

54. (வறுங்களம் நாடி மறுகல்) நினைப்பவர் மனம் நிறைந்திருப்பார், புன்னை நீழலுற்றோர். கடலிலிருந்து விடம் வாரி உண்டருளியவர் - அவர் மலையில் பச்சிளங் கிளிகளே! தினைப்புனத்து இதணில் சில நாளிருந்த திருந்திழைக்கு என்வருத்தத்தை யார் இதமுறக் கூறுவார் ஒருவருமில்லை என்றபடி.

கனைவாரி - முழங்கும் கடல். எனைவாரிதமுற - என் நைவுயார் இதமுற - எனப் பிரிக்க வேண்டும்.

55. (பாங்கி கூற்று) வரராசையெந்தாய், செழித்த பசுக்களை உயர்ந்த மலையால் கரந்து (மழையைத் தடுத்து) உதவிய மாயவன், குழைந்து வேண்ட ஒளியுடை ஆழியைக் கொடுத்தவனே, காவி மலரனைய விழியுடைத் தலைவி இழை யாவற்றையும் (உடல்மெலிவால்) இழந்தாள். என்ன செய்வாள்! அவள்பால் கருணை மழையைவை. இரங்குஆள் - இரக்கங் கொண்டு ஆள்க.

தவ(ம்)ம(ண்)ணி மாலொழி யேற்(கு)அருள் பாந்தட்
[சடில,கவுத்
துவமணி மார்ப, புவனமும் வானுஞ் சுடரெனநிற்
பவ,மணி மாக மளந்தோய்,செம் மேனிய பச்சைவண்ணா!
நவமணி மாளிகை சூழ்கூழைச் சங்கர நாரணனே. 56

நாரம், அறுகு, வளைமதி சூடிய நாகவனத்
தோர், அம்மறுகு வளைகவர்ந்தா(ர்)இனிச் சொல்வதென்,மால்
பாரம், மறுகு வள்,ஐயோ இவள்படு பாவிமதன்
ஈரம் அறு,கு வளைதனக் காரிங்(கு)எதிர் நிற்பரே. 57

---

56. பாம்பையணிந்த சடையுடையோனே! கவுத்துவ மணிந்த மார்பனே! புவனமும் வானும் சோதிவடிவில் நிற்பவனே! மண்ணையும் விண்ணையும் அளந்தவனே! செம் மேனிய! பச்சைவண்ணனே! புதிய மணிகள் இழைத்த மாளிகைசூழ் கூழையின் சங்கரநாராயணனே! தவம் பண்ணி மாலையொழிக்காத தமியனேற் கருள் செய்வாய்.

சிவன் திருமால் இருவரின் பகுதிகளையும் இணைத்து வருணித்தார். தவம் மண்ணி - தவம் பண்ணி. மண்இமாகம் - எனப்பிரிக்க.

57. (பாங்கி கூற்று) கங்கை அறுகு பிறை சூடிய நாக வனத்தோர், அழகிய வீதியில் வளைகவர்ந்தார் (என்றால்) சொல்லுவது யாது? மயக்கம் பெரிதாக இவள் மறுகுவளே! ஐயோ படுபாவியாகிய மன்மதனது ஈரமில்லா குவளை தனக்கு எதிர்நிற்பவர் இங்கு ஆர்?

நாரம் - நீர். மால்பாரம். மறுகுவள் ஐயோ - இரக்கக் குறிப்பு. ஈரம் அறுகுவளை - கொலைபாணம் என்பதைக் காட்டியது.

எதி(ர்) ஆடி அங்கமிலான்என்செய் வான்,மை யெழுதுகண்முத்
து(உ)திரா(ள்) தியங்க மதியழ லா(து)ஒளிர் பூணணிந்து
கதிராடி யங்கனை பார்க்கும்,நின் மாலைகண் டால்சுடலை
அதி(ர) ஆடி, யங்கண, தென்கூழைச் சங்கர அற்புதனே. 58

அற்புத, வந்(து) அரி யேத்திய கூழை யமல,விம
வெற்பு(உ)த (வு) அந்தரி யோடும்என் நெஞ்சகம் வீற்றிருக்கப்
புற்புதம் அம்தரி பூண்முலை யார்க்(கு) அன்பு பூண்டமயற்
கற்புத வந்தரி யார்புரம் போலென்று காண்பதுவே. 59

---

58. (பாங்கி கூற்று) சுடலையில் அதிர ஆடினவனே, அங்கணனே, தென்கூழைசங்கர, அற்புதனே! நின்மாலை கண்டால் (கிடைத்தால்) தலைவி கண்ணாடியில் (தன்னைப்) பார்ப்பாள். அங்கமில்லாதவனும் மன்மதன் எதிர்நின்று போராடி என் செய்வான். இவள் கண்முத்தை இனி உதிராள். விளங்கும் மதியும் வெம்மைதராது.

முத்துதிராடியங்கமதி - முத்துதிராள் - தியங்கமதி எனப் பிரிக்க. அங்கனை - தலைவி. அதிராடி - அதிர ஆடி

59. அற்புதனே! வந்து அரி (திருமால்) ஏத்திய கூழை அமலனே, இமயமலை உதவிய அந்தரியோடும் (உமை) என்னெஞ்சகம் வீற்றிருக்க, குமிழிபோன்ற அழகுதரித்த முலையார்பால் பூண்ட மயல் என்ற கற்கதவு - தரியார்புரம் போல் (முப்புரம்) இல்லையாகிடுமே! அதனை என்றுகாண்பது.

வந்தரியேத்திய - வந்து அரி ஏத்திய. வெற்புத வந்தரி - வெற்பு உதவு அந்தரி. புற்புதவந்தரி - புற்புதம் (குமிழி) அம்தரி - அழகைத்தரித்த, கற்புதவந்தரி - கற்புதவம் தரியார் புரம் என இணையும்.

காணு (து)இருவ ரடிமுடி தேடுங் கனகசபை
வாணு, திருவர ராசையெந் தாய்,செம் மணிப்புயங்கப்
பூணு, திருவர மாதனை யாள்மயல் பூண்டுநிறை
பேணு(து) இருவர வேல்விழி யார்வசை பெற்றனளே. 60

பெற்றத்(து) இலக வுலாவரு வார்,என் பிழைமதிபின்
பற்றத் திலக நுதல்பாகர் கூழைப் பரமர்,நிலா
முற்றத்(து) இலக மகிழ்வோடும் என்னை முயங்கிஅல்அ
கற்றத் திலக மளவுமெண் ணுரென்ன கற்பனையே. 61

---

60. (பாங்கி கூற்று) மாலும் பிரமனும் முடி அடிதேடி உழல நின்ற கனகசபை வாணு, வரராசை யெந்தாய், சிவந்த மணி கொண்ட அரவாபரண, திருமகளை ஒத்த தலைவி மயல் பூண்டு - நிறைபேணுது, வேல் அரமென்ற இரண்டையும் ஒத்த விழியாரின் வசைபெற்றனள். திருவரமாதை - திருவாகிய வரமுடைமாது.

61. (தலைவி கூற்று) இடபத்தில் விளங்க உலாவருவார். என்மதிபின்பற்றத் திலகநுதலை யுடையவளைப் பாகமாக உடைய கூழைப் பரமர், நிலா முற்றத்தில் மகிழ்வோடு என்னை முயங்கி மயக்கமகற்றக் குன்றியளவும் (அவர்) எண்ணுரே! இக்கற்பனை என்ன பயனைத் தரும்.

அல் - இருள், இங்கே மயக்க மெனலாம்.

கற்பகக் காநிழ (ல்)உற்றேன் பணிசங் கர,நமனு
டற்பகக் கால்நிமிர் தென்கூழை வாண, திவாகரனில்
பொற்பகக் கானிற்கும் வெண்ணிலவு ஆலம் பொதியவுயர்
வெற்பகக் கால்நில விற்கொடி தா(ம்)இந்தமெல்லியற்கே. 62

இயலரு காவணம் சங்கத்தில் ஏறு (ப்)இறைவர்நறை
பெய்யல (ர்)உ காவணம் அன்பர்க்குள் ளா(ர்)இந்தப்
[பெற்றிசெய்யார்க்கு
அயலர்,உ காவண மேனியர், கூழை அணிநகர்சூழ்
வயலரு(கு) ஆவணங் காண்,கடந் தேம்வெய்ய வன்சுரமே.63

---

62. (பாங்கி கூற்று) கற்பகச் சோலையுடைய இந்திரன் பணியும் சங்கர! நமன் உடல் பிளவுபட திருவடி உயர்த்திய தென்கூழைவாண! இத்தலைவிக்கு சூரியனைப் போல, சந்திரன் வெண்ணிலவாம் விடத்தை கக்கும். தென்றல் காற்றோ நிலவைக் காட்டிலும் கொடிதாயிருக்கும்.

பக - பிளவுபட. திவாகரன் - சூரியன். ஆலம் - விடம்.

63. (தன்பதியடைந்தமை தலைவிக்குக் கூறல்) இயல்பு கெடாத இயற்றமிழ் கொண்டு சங்கத்திலேறும் இறைவர், தேன் நிறை மலரைப் பெய்து வணங்கும் அன்பர்க்கு அணிய ராகவும், இந்தத் தன்மை செய்யாதவர்க்கு அயலராகவும் இருப்பார். கெடாத அழகுடையவர், வாழும் கூழை அணிநகர் சூழ்ந்த வயலருகுள்ள கடைத்தெரு இது காண்க - வெய்ய பாலைவழி தாண்டி வந்துவிட்டோம்.

அருகாவணம்-குறையாவண்ணம், சங்கத்தில் இறைவன் ஏறியமை – நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி, நற்கனகக் கிழிதருமிக்கு அருளினோன் – என்பதால் (திருநாவுக்கரசர்) புலப்படும். நறைபெய்அலர் உகாவணங்கு. அன்பர் - எனப் பிரிக்க வேண்டும். ஆவணம் - கடைவீதி.

வன்னி-கரந்தை யறுகுஆர் அரவ(ம்) மதிமுடித்த
சென்னி, கரந்(து)ஐ அம் பெய்வோனைக் காய்ந்தவன்,
[சிற்றிடைதான்
மின்னி கர் அம்மைதய லோர்பாகன் கூழை விமலன்வெற்பா!
கன்னி கரம்தை வரவெல்ல லாம்சிலைக் காமனையே. 64

காம(ன்) அம் பால்இடர் கொண்டு,மின் ஞார்முலை கண்டுமயங்
காம(ல்) நம் பு,ஆலிலைக் கண்துயில் வோன்கம லாசனன்ஐங்
காமன் நம்பாலிளங் கன்னிவைத் தோய்என்றுகைதொழுதற்கு
ஆ(ம்)மனம் பாலி எனுங்கூழை வாழ்கறைக் கண்டனையே. 65

---

64. (பாங்கி உலகியலுரைத்தல்) வன்னிபத்திரம், சிவகரந்தை, ஆத்தி, பாப்பு, சந்திரன்சூடிய திருமுடியர், மறைந்து அம்பு எய்வோனைக் காய்ந்தவர், மின்னல்நிகர் சிற்றிடை கொண்ட உமையோர்பாகர், கூழைவிமலரது மலைக்குரியவனே! தலைவியின் கரம் பற்றினல் மன்மதனை வென்று விடலாம்.

கரந்து ஐ அப்பு எய்வோன் - என்க. மின்னிகர் அம் கரம் தைவர (பற்ற - திருமணம் செய்ய) வெல்லலாம்.

65. காமன் அம்பால் துன்புற்று, மின்னார் முலைகண்டு மயங்காமல், இலைக்கண் (ஆலிலை) உறங்குபவன், தாமரை மலரில் இருப்பவன், ஐந்துசோலைகளின் அரசன் ஆகியவர்கள் அழகிய இளங்கன்னியை வைத்தோய்! என்றுகூறி வணங்குதற்கான மனத்தைத் தா - என்று வேண்டுவார்கள். அப்பெருமானை (நெஞ்சேநீயும்) நம்பு.

அம்பு - நீர். ஐங்கா, மன் - ஐந்து சோலைகளின் அரசன்.

கண்தலம் போ(து)இரண் டானவர் கூழையிற் கண்ணுதலார்,
கண்டலம் போ(து)இகழ்ந் தோர்சங்க ரேசர், கனவரைமேற்,
கண்(டு) அல்அம் போதி,சொல் மென்கோதை, மைவிழிக்
[கன்னியிடை
கண்(டு)அலம்(பு)ஒதியளிகாள் இருக்கக் கருதுகவே. 66

கருமம் கவலை நெறியால்வந்து எம்மைக் கலக்க, எழு
கருமங்க, வ(ல்)லைநெஞ் சேவர, ராசைக் கதிரவன்
(நி)கரும்அங் க,அலை நதிசூடி யென்றுகை கூப்புவதே
கருமம், கவலை யினிவேறு வைக்கக் கடவ(து) அன்றே. 67

---

66. (தலைவன் வண்டோச்சி மருங்கணைதல்) கண்கள் இரண்டும் சூரிய சந்திரர்களானவர், தாழம்பூவை (சூடத்தகா தென்று) இகழ்ந்தவர் மலையில், (கற்) கண்டு, இருள், கடல் என்றிவைகள் மொழி, கூந்தல், விழி இவற்றுக்கு உவமை ஆகும். கன்னியின் இடை கண்டால் (மென்மை யுணர்ந்தால்) வண்டுகளே! நீவிர் இவள் கூந்தலில் அமர்ந்திருக்கமாட்டீர்.

கண்டு அல் அம்போதி - சொல்லுக்கும் கூந்தலுக்கும் விழிக்கும் நிரல் நிறையாயின. கண்டு - முதற்குறை. அம் போதி - கடல்.

67. வினைகள் பல்வேறு வழிகளால் வந்து எம்மை வருத்த, எழும் பிறவியானது ஓயும்படி, வராசையிலுள்ள கதிரவனை ஒத்தவரே, அலைநதியைச் சூடியவரே என்று விரைந்து கைகூப்புவதே முறையாகும். இதுதவிர வேறு கவலை வேண்டாம்.

கவலை நெறி - கவர்த்தவழி. எழுகருமங்க - பிறவி ஒய கதிரவன்நிகர் அங்க, அலைநதிசூடி என்பன விளிகள்.

கடம்தந்(து) அனமென் முலேமருங் காள்பங்கர் காவில்வண்டு
க(ள்)தந்தந் தனமென் றிசைபாடுங் கூழைக் கறைமிடற்ருர்
கடந்த அம்தனவெற்பை மீறும் புயத்தர், கடுக்கைநல்கார்
கடுஅந்(து) அந்தன அங்கமென வரும் பாவிக் கருங்கங்குலே.

கங்குலே மாலே யனேயமென் கோதை, கலாமதியம்
கங்கு(உ)லே மாலே யன(ல்) அதன் மேல்மெழு கான(து)என்னங்
கம்,கு(ல்)லே மாலேய ஞேர்கூழை நம்பர் எக்காலமயக்
கம்குலே மாலே யருள்வ(ர்)என் றேயழுங் கண்பிசைந்தே. 69

---

68. (தலேவி கூற்று) குடம் நூல் இவையொத்த தனம், இடைகொண்டவளே ஆளுகின்றவரின் சோலேயில், வண்டுகள் தந்தனமென்றிசை பாடும் கூழைக் கறைக் கண்டமுடையார், தனவெற்பாம் (பொன்மலே) மேருவை வென்ற புயத்தார் கொன்றை மாலேயைத் தரவில்லே. அதனுல் விடம், அந்துப் பூச்சி இயமன் என பாவிக் கங்குல் வந்து துன்புறுத்தும்.

கடம், குடம் - தந்து, நூல், முலே, இடை நிரனிறை, தந்தனம் - ஒலிக்குறிப்பு, மேருவுக்குப் பொன்மலே என்ற பெயருமுண்டு. கடு அந்து அந்தன்—எல்லாம் துன்பம் தருவன.

69. (பாங்கி கூற்று) இருளேயும், மேகத்தையும் ஒத்த கூந்தலேயுடையாள்; மதியம் உலேயென அமைய அதன்மேல் மெழுகாயிற்று என் அங்கம் என்கிருள். துழாய் மாலேயனும் அயனும் உணருகின்ற (வணங்குகின்ற) நம்பர், எக்காலம் மயக்கம் தீரும்படி மாலேயை அருள்வார் என்று கண்பிசைந்து அழுகின்ருள்.

கங்குல் - இருள். கங்குஉலே – பக்கம், ஊதுலே. குல்லே – குலே - தொகுத்தல். கண்பிசைந்தழுவள் - பேதை என்றபடி.

கண்ணிக்(கு) அரும்புயர் மால்வரை தோள்சொ(ல்) நகை
[கொங்கைவேற்
கண்ணிக்கு அரும்புயம் ஆர்மெலி யார்,கம ழுந்துளவக்
கண்ணிக் கரும்புய லோர்பாகர், கூழைக் கமலவயற்
கண்ணிக் கரும்பு(ய்)ய நோக்காது சேரல்வெம் கார்முகிலே. 70

கா(ர்) அங்(கு) அடுக்க மயிலாடுங் கூழைக் கடவுள் அந்த
காரம் கடுக்க வளர்கோதை பாக(ன்)என் காமவெவ்வி
காரங் க(ள்)துக்க(ப்) ஒழிநெஞ்ச மே,வெங் கணைபடுபுண்
காரங் கடுக்க யமவாதை உற்றிடுங் காலத்திலே. 71

---

70. (தலைவன் மேகத்தோடு கூறல்) கணுக்களையுடைய மூங்கில் என்ற வளர்தோள், கரும்பு மொழி, அரும்பு நகை, மாமலை கொங்கை என்ற இவற்றையுடைய வேலனைய கண்ணுடையாட்கு யார்தான் தோள் மெலியார்? துளவமாலையுடை கருமேக வண்ணனை, ஒருபாகத்தில் உடைய கூழையிறைவரின் வாய்காலுடைய வயலில் தோன்றிய கரும்பாம் தலைவி உய்யும்படிசெய்ய, அங்கே மேகங்களே! சேராதொழிக.

கண் (மூங்கில்) இக்கு அரும்பு வரை - நிரலாகதோள் சொல் நகை கொங்கையுடன் இணைந்தன. அவளை நினைந்து யாவரும் உடல் மெலிவர் என்றபடி, கரும்புயல் – திருமால். கரும்பு உ(ய்)ய நோக்காது சேரல்! அவள் உய்வதற்குதவுக!

71. நெஞ்சமே! வெங்கணை பட்டபுண்ணில் காரம் செருகினால் போல யமவாதை உற்றிடும் காலத்தில்; மேகம் வர மயிலாடும் கூழைக்கடவுள்! இருளைக் கோபிக்கும் கூந்தலையுடையவளைப் பாகமாகக் கொண்டவர் என்பாயாக! கொடிய காமவிகாரம் ஒழி!

கா(ல்) அம் கன(ல்) அந்தரம் நிலம் ஆனவர் கண்ணின்மணி
கால் அம்க(ன்)னலங் கழனியி ராசைக்கங் காளர்,கங்குற்
காலங் கன(ல்) அம் புலிதூரந்(து) ஆவிநல் காதிருந்தக்
கா(ல்) அங்க(ம்)நலம் பெறவரைந் தேகிழி கைக்கொள்வனே.

கைக்கய(ம்) அன்றுரி தென்கூழைச் சங்கர, கா பத்துத்தி
கைக்(கு)ஐய, மன்று(ள்)நடிக்கும் பிரா(ன்)என்று
[கைதொழுமேல்
கைக்கய மன்தொடர் கால(ப்)எக்கால(ப்)அக் காலமருள்
கைக்(கு)ஐய மன்று மனமே, ஒழியுங் கருக்குழியே. 73

---

கார் அங்கு அடுக்க, அந்தகாரம் கடுக்க, வெவ்விகாரங்கள் துக்கம், எனப்பிரிக்க வேண்டும் முதல் மூன்று வரிகளை, காரம் - காரச்சீலை, காமியத் தழுந்தி இளையாமல், காலர் கைப் படிந்து மடியாமல் கூழை இறைவனை நினைக்க.

72. (மடலேறுதலைத் தன்மேல் வைத்துத் தலைவன்கூறல்) காற்று, நீர், தீ, ஆகாயம்,நிலமென்ற ஐம்பூதமாக இருப்பவர், கணுக்களில் முத்துக்கள் வெளிப்படக் கரும்புவிளை கழனி சூழ்ந்த இராசைக் கங்காளர்; இரவிடத்தே அம்புலியாம் தீ அகல, என் உயிரை (தலைவியை) எனக்குத் தரவில்லையானல், அவள் அங்கம் நலம் பெற வரைந்த கிழியைக் கைக் கொள்வன். (மடலேறுவன் என்றபடி).

கால் அம் கனல் அந்தரம் நிலம் - ஐம்பூதங்கள். மணி கால் அங்க(ன்)னல் - முத்துவிளையும் இடங்களில் கருப்பும் ஒன்று. ஆவி - (உயிரனையாள்) தலைவி.

73. கையையுடைய யானையை அன்று உரித்த தென் கூழைச் சங்கர, பத்துத் திசைக்கும் தலைவ! மன்றில் ஆடும் பிரான்! என்று மனமே தொழு! கருக்குழி ஒழியும். யமன் தொடர் காலம் எக்காலமோ அக்காலத்தில் அவர் அருள் கைக்கு ஐயமின்று.

கருந்தா(ர்) அணிகுழல் பங்காளர் கூழைக்கங் காளர்பொன்ன
கரும், தாரணியு(ம்), அயனு, முராரியுங் காண்பரியார்
கருந்தா ரணிமதன் காய்ந்தோர் இளங்களி வண்டுகள்நு
கருந்தார் அணிய(ல்)என் கைத்தாமரைவரக்காண்கிலனே.74

காணப் பதஞ்சலி யாடிய கூழைக் கடவுள்கஞ்ச
நாணப் ப(த்)து அஞ்சலி செய்வலென்று ஓடி நடந்ததெல்லாம்
வீண், அப்ப(து)அஞ்(சு) அல் இகலாம் உனக்கவர் மீதுமையல்
பூணப், பதஞ்சலி யாநின்ற தென்னினிப் பூங்கொடியே. 75

---

கைக்கயம் - யானை (கஜம்). திகை - திசை. அருள்கைக்கு ஐயமன்று எனப் பிரிக்க.

74. (தலைவி கூற்று) பெருமையான மாலை யணிந்த குழலினையுடையாளின் பங்காளர், கூழைக் கங்காளர், பொன்னகர், (தேவஉலகம்) தாரணியுள்ளோர்களும் அயனும் முராரியும் காண அரியவன். கரு (பெருமை) தாரெனும் படையுடைய மன்மதனைக் காய்ந்தோரது இளைய களிவண்டுகள் நுகரும் மாலை, என்கைத் தாமரையில் இன்னும் வரக் காணேனே.

கரும் - பெருமையுடைய, கங்காளர் – எலும்பை அணிந்தவர். முரனை அழித்தவர் – முராரி. தாரணியல் - இருபெயரொட்டுப் பண்புத் தொகை.

75. (பாங்கி கூற்று) பதஞ்சலிகாண நடனமாடிய, கூழைக் கடவுளுக்கு, பத்து அஞ்சலி செய்வல் என அன்னம் நாண நடந்த தெல்லாம் வீணாயிற்று. அம்புகள் ஐந்தும் இருளும் உனக்கு இப்போது பகையே. அவர்மீது மயக்கம் கொள்வதால் நடந்த பாதங்களும் வருந்தின. இப்படி இருந்தவாறு என்னே!

பூங்கமு(கு) ஆரம் சொரிகூழை நம்பர், பொன் தாளின்மலர்
ஆங்க(ம்)உகா(ர்)அகஞ் செல்லார் சிலம்பி(ல்) நி(ன்)
[அங்கைவளை
நீங்க, முகாரவிந்தம் சருகாக நினைத்து, மனம்
ஏங்க, முகார இசைத்தீ விளைக்கு(ம்) இளங்குயிலே. 76

குயி(ல்) ஆய மாமனை யுள்ளிருந்து ஆவியைக் கொள்ளை கொள்ள,
அயில்ஆய மாம(ன்)ஐ அப்பனை வாவென் றழைப்பதுபார்,
கயிலாய! மாமனை யன்றடுங் கூழைக் கடவு(ள்), உவ
மயிலாய மாம(ன்) ஆவுடை மாதிடம் வைத்தவனே. 77

---

பதஞ்சலி - முனிவர். பதஞ்சலி - ப(த்)து அஞ்சலி. பதஞ்சலி – அம்பு (அது) அஞ்சு அல் (ஐந்தம்பும் அச்சப்படும் இருளும்) பதஞ்சலி – பதம் சலியா நின்றதெனக்கொள்க.

76. பாக்கு மரம் முத்துக்களைச் சொரிகின்ற கூழை நம்பரின் திருவடிகள் மீது, மலர் உகாத சிறியவர்களின் மனத்தில் புகாதவரின் மலையில்; கைவளை நீங்க முகத்தாமரை சருகெனவாட, மனம் ஏங்க, முகாரியையே இளங்குயில் தீயென இசைக்கும். கமுகு – பாக்கு. பாக்கும் முத்துத்தரும் இடங்களில் ஒன்று. ஆங்கமுகாரகம் - ஆம் கம் உகார் அகம். போதொடு நீர் சுமந்தேத்திச் செய்யும் வழிபாட்டின் நிலை காட்டினர். சிலம்பு - மலை. முகம் + அரவிந்தம், முகார இசைத்தீ - துன்பப்பண்.

77. (பாங்கி கூற்று) கயிலாய! தக்கனை அன்றடும் கூழைக்கடவுளே! உவமையில்லாதவனே. திருமகளின் தலைவனாகிய திருமாலை இடப்பாகத்தில் ( ஆவுடைமாதின் இடம் ) வைத்த பெருமானே! (குயிற் கூட்டம் மாமரக்கூட்டுள்ளிருந்து உயிரைப் பறிக்கக் கூர்மையுடைய பெரிய வண்டுகள் தங்கும் மலர்ப் பாணங்களை உடைய மன்மதனைக் கூவி அழைக்கின்றன பார்.)

வையக(ம்) அத்தனையு(ம்) தனியாள வரினு(ம்)அவை
பொய்ய, கம் அத்த(ன்)ஐ ஆனனன் கூழைப் பொருப்புவில்லி,
துய்ய க மத்த(ன்),ஐ, சிற்றிடை பாகன், துணைப்பதமா
மெய்யக(ம்) அத்தம் நைவோர்க்கு(ம்)அதேயன்றி
[வேறில்லையே. 78

இல்லை யரும்பவ(ம்) எந்தைதென் கூழை யிறைநடனம்
அல்லை யரும்பவ(ன்) ஆல முண்டோ(ன்) அருட் சோதியென்று
சொல்,ஐ அரும்ப வசமழி யாமுனம் தோகையரை
முல்லை யரும்பவர் மூரலென்று ஓடி முயங்குநெஞ்சே. 79

---

மாமனை - மாமரமாகிய வீடு. மாமனை யப்பனை - மா - மன் - ஐ அப்பனை. அம்பன் - அப்பன் என வந்தது.

அரியலால் தேவியில்லை. ஐயன் ஐயாறனுற்கே - என்றது காண்க.

78. உலகம் முழுவதையும் பொதுவற ஆளும் அச் செல்வங்கள் வந்தாலும் அவை அனைத்தும் பொய்யே. கபால முடையவர், ஐந்து முகமுடையவர், மேருமலையை வில்லாக வுடையவர், பூரணராக இருப்பவர், சிற்றிடை கொண்ட உமை பாகன் திருவடியே மெய்மைப் பொருளாகும் – செல்வம் வேறில்லையே என்பது அறிக.

79. எந்தை தென்கூழையிறைவன்; நடனம் இரவில் ஆடுபவன், உயிர்களனைத்தும் பிறக்கக் காரணமான பவன் என்று சொல்ல, கோழை முதலியவற்றால் வசமழியா முன் முந்துக. அப்போது பிறவி இல்லையாகும். தோகையரை முல்லையரும்பனைய மூரலர் என்று ஓடி முயங்கும் நெஞ்சமே - பிறவி போகச் சிவனை எண்ணுக.

சொல் ஐ அரும்ப வசமழியாமுன் எனப்பிரிக்க.

முயலக(ன்) ஆக முரியநின் ருடி, முதுபலிதேர்
செயலக,நாக மு(ன்)இக்களித் தோய்,சந்த்ர சேகரனே,
இயலக ஞக வனமென வாழு(ம்)இறைவவென்றே
மய(ல்) அக,ஞக ரிகமாதர் மீதின் மடநெஞ்சமே. 80

மடங்கலை வாரண(ம்) மாய்ப்பது போல மதர்விழியீர்!
நுடங்கலை வாய்த்த மருங்குலை மாய்க்கு(ம்) நுமதுமுலைத்
தடம்,கலை வா(ர்)இல்லை யே(ல்)உயிர் கொண்(டு)எவர் தாம்
[இருப்பார்?
முடங்(கு) அலை வாரிநஞ் சுண்டோர்தென் கூழை முகில்
[வரைக்கே. 81

---

80. முயலகனின் முதுகு நெளிய நின்ருடுபவனே! பலி தேர் செயலனே! கல்யாணைக்கு முன்பு கரும்பளித்தவனே! சந்திரசேகரனே! நாகவனத்தையே இயல்பிலமைந்த அக மெனக் கொண்டு வாழுமிறைவனே என்று சொல்லி நாகரிக மாதர் மீது தாழும் நெஞ்சினைத் தடுத்திடு. மயக்கத்தை அகற்றுக.

முயலகன் ஆகம், செயல - விளி. கல் நாகமுனிக் களித் தோய் கல்யாணைக்கு முன் இக்கு அளித்தோய், இயல்அகம் நாகவனம், மயல்அக - எனப் பிரிக்க.

81. (தலைவியைப் புகழ்தல்) செருக்கிய விழியுடையீர்! சிங்கத்தை யானை மாய்ப்பதுபோல அசையும் இடையை நுமது முலைத் தடம் மாய்க்கும். கலையாகிய வாரில்லையாஞல் உயிர் கொண்டு, முடங்கிய அலைகளுடைய கடலில்நஞ்சு உண்டோர் தென்கூழை முகில் வரையில், எவர் இருப்பார்?

மடங்கல் – சிங்கம். எவர்தாமிருப்பார் - தாம் அசை. சிங்கத்தின் இடைமெலிவு - மெலிந்த இடைக்குப் பொருந்திய உவமையே. கலைவார் - துணிக்கச்சு.

வரைக்கே கயமொரு பங்காளர் கூழை வரதர்,வெற்பில்
இரைக்கே கய(ம்)நதி போங்குரு கே, அன்(று)இறைவர் [சொன்ன
உரைக்கே(கு) அயரு(ம்)என் செய்தியெல்லாம் அங்கு(உ)ரைத் [தருளித்
தரைக்(கு) ஏகயம(ன்)அச் சந்த்ரோ தயமன்றித் தானிலேயே.

தானவ(ர்) அப்புரங் காய்ந்தவர், கூழையிற் சங்கரர்,மால்
ஆனவ(ர்), அப்புரங் காட்டிய வேளுடற் கங்கியிட்டோர்,
ஞானவ ரப்பு(உ)ரம் பெற்(று) அடி போற்றுநற் றொண்டர் [தம்மை
மானவ ரப்புரந்(து) என்னையங்கு ஆள மதிப்பதென்றே. 83

---

82. வரைமயிலாம் அம்மை பங்காளர், கூழைவரதர் மலையில் இரைக்காகக் குளத்திற்கும் ஆற்றிற்கும் செல்லும் நாரையே! அன்று இறைவர் சொன்னவார்த்தை நினைந்து வருந்தும் என்செய்தியெல்லாம் அவர்க்குச் சென்றுரை. இத்தரையை (தரைவாழ் பவர்களை) மாய்ப்பதற்கு ஏகமான (ஒற்றையான) யமன் அந்தச் சந்திரோதயமே என்பதையும் உணர்த்து. கேகயம் - மயில். கயநதி உம்மைத் தொகை. உரைக்கே - அயரும் எனக் கொள்க' ஏக யமன் - தனித்த யமன்.

83. கூழைச்சங்கரர் அசுரருடைய புரங்களை (முப்புரம்) அழித்தவர். மாலாகிய இடபத்தையுடையவர். அம்பின் வலிமை காட்டிய வேள் (மன்மதன்) உடலுக்கு அங்கி (நெருப்பை) இட்டார். ஞானவரப்புடையோராம் தொண்டர்களைப் புரப்பதுபோல என்னைத் தம்பால் வரச்செய்து மதிப்பது என்றோ!

அப்பு - அம்பு. வேளுடலை வேகவைத்தவர். ஞானவரம்பு ஞானமாகிய எல்லை. மான - ஒப்ப.

மதிஆ தவ(ன்)இரு கண்ணுகுங் கூழை வரதர்,வெற்பில்
விதியா, தவ(ப்)நிறைந்தோர்க்கும்விதித்தவெங்கூற்றெனவே,
உதியா தவனிதை யெங்கே உதித்த து(உ)றையும்இவர்
பதியா(து) அவனிகொல் லோவிசும் போஎன் பகர்கின்றதே.

பகலவ(ன்) அங்கண் பறித்தோர்,தென் கூழைப் பரமர்,
[வில்வேள்
இகல அனங்க னெனவிழித் தோர்வெற்பில், என்னை அன்பர்
அகல,அ(ல்) நங்(கு)அ யரும்படி சேரு(ம்) அவசமெல்லாம்
புகல,வ னங்க ளிலையோ அவர்முனம் பூவையரே. 85

---

84. மதியும் ஆதவனும் இரு கண்ணுகை இருக்கும் கூழை வரதர் மலையில்,விதியென்னும் பிரமன், ஐயகோ! தவம்நிறைந் தோர்க்கும் விதித்த வெங்கூற்றெனவே (ஆண்வடிவத்திலன்றி) வந்த பெண்ணனவள் பிறந்தது எங்கேயோ! உறையும் இவர் பதியாதோ! அவனியோ விசும்போ-யாதென்று சொல்வது?

மதியாதவன் - மதி, ஆதவன். விதி ஆ தவன் – தவம் தவன் போலி.

85. (தலைவி கூற்று) பகன் என்னும் கதிரவனின் கண்ணைப் பறித்தவர்; (தட்சயாகத்தில்) தென்கூழைப்பரமர், வில்லுடைய (கரும்புவில்) வேளாகிய மன்மதனை மாறுபடும் படி (அனங்கனுகும்படி) விழித்தோர் மலையில்; என்னை அன்பர் அகல இருளும், கூறப்படும் பழமொழிகளை யான் துன்புறும் படிச் சேரும் திறமெல்லாம் அவர் முன் தூதாகக் கூறத் தோழிகளே! அன்னங்கள் இல்லையோ!

வெய்யோன் கண் பொதுத்தவன். (53) நங்கு-பழமொழி, அல் நங்கு அயரும்படி - எனப்பிரிக்க. அவசம் - துன்பம். அவர் முனம் - அவர் முன்னம். அனங்கள் – அன்னங்கள்.

பூவைய(ம்), மாதவன் தேடுபொன் பாதர்பைம் புன்னைவனத்
தேஐய(ப்) மாத ரிடஉகந் தோர்,தென் னிராசைவெற்பில்
பாவைய மாதனு வில்லை,வெம் போர்செய் பகழியில்லை
மாவை,அ மாதழை யாலிவர் தா(ம்)எய்த வாறுநன்றே. 86

வாகைக் கணைகொடு வந்தோனை வெல்வர ராசையெந்தாய்,
தோகைக்(கு) அணைகொடுங் கையா அயரும் துயரமெல்லாம்
போகைக்(கு) அணை,கொடு செவ்விதழ், அல்லது பூங்கடுக்கை
ஈகைக்(கு) அண் நைகொடுங் காம விகார மெளிதல்லவே. 87

---

86, (பாங்கி தலைவனை நகுதல்) பூமியாகிய வையத்தில் மாதவன் தேடும் பொற்பாதர், (பூமியில் ஏனமாய் அகழ்ந்தான்) பைம் புன்னை வனத்தே(வு) (தெய்வம்), மாதர் ஐயமிடவுகந்தோர் மலையில் பாவை! அம்மா (வியப்பு) தனுவும் பகழியும் இல்லை, விலங்குகளை இவர் தழையால் எய்தவாறு நன்று.

கணைதப்பி மா வந்ததா என்று கேட்கும் தலைவனிடம் வில் பகழி இல்லாமல் தழை மட்டுமே இருக்கக் கண்ட தோழி கூற்று அழகிது. தே - தேவு என உகரம் பெற்றது. தழை - கையுறைப்பொருள். யமா - யம்மா என்பதன் தொகுத்தல்.

87. (பாங்கி கூற்று) வெல்லும் கணையொடு வந்தவனை வென்ற வரராசை யிறைவனே! இத்தலைவிக்கு கொடுங்கையே (மடக்கியகை) தலையணையாக - (உறங்காமல்) வருந்துதற்குக் காரணமான துன்பமெல்லாம் போகும்படி அணைவாயாக. செவ்விதழ்தா அல்லது கடுக்கை ஈகைக்கு வருவாயாக. நையவைக்கும் காமவேதனை எளிதாக இல்லை.

எங்கும்-வாகையே பெற்றவன் கணை ஆதலால் அதுவே வாகைக் கணையாயிற்று. அவனை வென்றவன் வரராசைப் பெருமான். ஈகைக்கு அண்-நை கொடுங்காமம் எனக்கூட்டுக.

அல்லி அமருங் கமலம்வெய் யோனன்றி யார்திறந்தார்,
கொல்லி ய(ம்)அமருங் கடலாக வே, பொரும் கூன்கருப்பு
வில்லி யமரும் தொலையவந் தீ(ர்),இந்த வெவ்விருளில்
வல்லி யமரும் ஒருபாகர் கூழை வரையணங்கே. 88

அணங்(கு)அர சேபொரு மாமத யானை அதனை ஒரு
கணம்கர, சேல்கரந் (து)என்ன,மின் னார்பொன் கலைகுலையும்
வணங்கர சேகரத் (து)ஏற்றார், உமைவளை யால்தழும்பு
ப(ண்)அங்கர, சேதனர்க்(கு) எய்தார்தென் கூழைப்
[பனிவரைக்கே. 89

---

88. (இரவுக் குறியில் தலைவியைப் பாராட்டியது) வல்லி விருப்பியிருக்கும் பாகத்தர் கூழை மலையின் அணங்கே அகவிதழுடைக் கமலத்தை வெய்யோனன்றி யார் திறந்தார்? (தாமரை திறந்து திருமகள் இருளில் வரலாயிற்றே - என்று புகழ்ந்தான்) கடலே ஒலிக்கும் வாத்தியமாக, கூனலுடைக் கரும்பு வில்லால் பொரும் மன்மதனை வெல்லத் துணையாக வந்தீர் வெவ்விருளில்.

கொல் இயம் அருங்கடலாக-அருங்கடல் கொல் இயமாக- என மாற்றுக. கொல் – அசை.

89. (நாணிக்கண் புதைத்தல்) மின்னார் பொற்கலை (ஆடை) குலையும்படி கையிலுள்ள தலையோட்டில் (பிரமன் தலை) இரந்தவர். உமை வளையால் தழும்புற்ற அங்கமுடைய வர். அறிவிலாதார்க்கு அகப்படார். தென்கூழை மலையில் பெண்களின் அரசே! போர் செய்யும் மாமதயானை (என்ற தனம்) அதனை ஒருகணம் மறைத்திடு. சேல் கரந்து என்ன? (கண்ணைமூடிப் பயனென்ன)

கையால் கண்ணைப் புதைக்கவே – தனங்கள் வெளிப் பட்டன. அதனால் தலைவன்வருந்தினன். மின்னார்-தாருகாவன

பனியாழி அங்கண் பவளச்செவ் வாய்முத்தின் பத்திநகை
இன்யாழ் இயன்மொழி மின்ஞர்க்குஇரங்கலபி ஏத்(து) அரிக்குத்
தனியாழி யன்றருள் கூழைப் பிரான்அருட் சாகரத்தில்
குனிஆ ழ்இயம படர்க்கு(ம்) அஞ் சேல்மருள் கூர்நெஞ்சமே. 90

கூ(ர்)அத்திரவிழிமேல்முத்தும்பொன்னுங்கொழிக்குமென்ருல்
ஆ(ர்)அத் திரவிய(ம்) ஆசைகொள் வா(ர்)அம் புலியை அந்தி
நேரத்(து) இரவியென்(று)எண்ணூர், மருங்கை நெருங்குதன
பாரத் தி(ர்)அவிர் சடையாளர், கூழைப் பதியன்பரே. 91

---

முனிபத்தினிகள் வணம் - வண்ணம் - தொகுத்தல். கர
சேகரம் - கைப்பாத்திரம் பணங்கர - பண் அங்கர்.

90. குளிர்ந்த கடல் சூழ் உலகில் பவளவாய் முத்தநகை யாழ்மொழி என இவை உடைய மின்ஞர்களுக்காக நெஞ்சே! ஏங்கலம். தன்னைப் போற்றிய திருமாலுக்குத் தனியாழியைத் தந்தருளியவன் கூழைப்பிரான், அவனருட்கடலில் மூழ்குக. யமவாதைகளுக்கு - ஏவலர்களுக்கு அஞ்சற்க.

பனி - நடுக்கம். இனியாழி - இன்யாழ் எனப்பிரிக்க. குனி - மூழ்கு. படர் - துன்பம், ஏவலர்.

91. (பொருட் பிரிவின் கண் தோழி கூறியது) கூர்த்த அம்பென்ற விழிகள் மேல் பொன்னும் முத்துங் கொழிக்குமென்ருல் (பசலையும் கண்ணீரும்) யார் அத்திரவியங்கொள்ள ஆசைப்படுவார்? இடையை நெருக்கிய தனபாரத்தீர்! அவிர் சடையாளர் கூழைப் பதியின் அன்பர் அம்புலியை அந்தி நேரத்துச் சூரியன் என்று எண்ணூர். (என்செய்வது)

அத்திரம்-அம்பு. கண்ணீரையும் பசலையையும் கொள்வாரில்லை. என்றபடி. அம்புலி - அந்திநேரத்து இரவி என்றமை அழகிது.

அன்(பு)அரி வைத்த சரணா விந்த(ன்) அயன்சிரத்தை
முன்(பு)அரி வைத்தனி வா(ள்)உகிரோன்,சமண் முற்று(ம்)அற
என்(பை)அரி வைத்தனு வாக்கிதன் தந்தை,யிராசைவெற்ப
நின்பரி வைத்தளர், நீயே யவட்கு நிகழ்த்துகவே. 92

நிக(ர்)ஆலே யம்சிலே வா(ள்)நுதற்கு என்னும்மன் னேமயக்கம்
தகரா(வ்)ஐய,நுண் மருங்குல்மின்னார்க்குத் தணியுங்கொலோ,
பக(ர்)ஆலே, யம்பை அணைகொண்ட மால்பணி யும்பதத்தார்,
மகரா லேயவிட முண்டோர்,தென் கூழை வரதருக்கே. 93

---

92. (நின்குறை நீயே சென்றுரை எனப் பாங்கி கூறல்) அரி (திருமால்) அன்புவைத்த திருவடியன், அயன் சிரத்தை முன்பு அரியும் கூரிய ஒப்பற்ற ஒளிநிறை நகத்தன், சமணர்கள் முற்றும் தொலையுமாறு என்பைப் பெண்ணாக்கிய ஞான சம்பந்தரின் தந்தையாம் இறைவனது இராசை வெற்பனே! நின் துன்பம் ஒழிய நீயே அவட்குக் குறையைச் சொல்லி விடுக.

அரி அன்பு வைத்த - என மாற்றவேண்டும். வாளுகிர் - ஒளிநகம். என்பு அரிவைத் தநுவாக்கி - என்பது வினையால் அணையும் பெயராய் ஞானசம்பந்தரைக் குறித்தது.

93. சொல்லப்படும் ஆலிலையை, அம்பைப் (நீரை) பாயலாகக் கொண்ட மால் பணியும் திருவடியுடையார், கடலில் தோன்றிய விடத்தை உண்டவர் - தென்கூழை வரதர். ஆலையிற்படும்வில் (கரும்பு) போன்ற நெற்றி என்று கூறும் அன்னையே! ஆட்டினால் மின்னலனையாட்கு மயக்கம் நீங்குமோ!

வெறியாடலும் - பலியிடலும் மயக்கம் தணிக்கும் வழிகள் என்ற மயக்கத்தை நீ முதலில் ஒழி - என்கிருள் தோழி.

வரந்தரு வார்தென் வரராசை யீசர், வயங்கியசிந்
துரந்தரு வாஉரி ஆடையர் மாமலைத் தோகைபங்கர்
நிரந்(து)அரு வாஉரு வாயெங்கு(ம்) நின்றருள்
[நின்மலரொ(ள்)
நக(ர்)அந்தரு ஆவென்று (உ)லோபரை ஏத்துங் கருத்தறவே.

அறந்திருந் தாநின்ற ராசைஎந் தாய் அணங்(கு) என்வயிற்றில்
பிறந்திருந் தா(ள்),அன்று தொட்டுஉயர் வானிற் பிறந்தநிலா
நிறந்திருந் தார்புரம் காய்ந்த நகையென்று நின்று,தன்னை
மறந்(து)இருந் தா(து) அளை பூங்கொன்றை யொன்றும்
[மறந்திலளே. 95

---

ஆலைநிகர் - ஆலைக்குஏற்ற. தகரால் ஐயம் - தணியுங் கொல்லோ. தகர் - ஆடு. ஆலை ஆலிலை - தொகுத்தல். அப்பு - நீர். மகராலயம் - மீன்வாழிடம், கடல்.

94. யானையை; மரத்தின் தோலை உரிப்பது போல உரித்து, அதனைப் போர்த்தியவர், பெரிய மலையின் மயிலாம் அன்னையைப் பாகங் கொண்டவர், எங்கும் பரவி அருவாய் உருவாய் நிற்பவர், நின்மலர்-தென்வரராசை யீசர் வேண்டிய வரந்தருவாரது ஒளியுடை நகரில் கற்பகமே - காமதேனுவே என்று உலோபரை ஏத்தும் செயலொழி.

ஏத்தும் அறிவெல்லை தாண்டி வரந்தருவார் கருத்து முற்றத்தருவார். சிந்துரம் - யானை. தருவா - மரமாக. ஒள் நகர் - கூழைநகர். தரு, ஆ - என்று உலோபரை ஓதாதே.

95, (செவிலி கூற்று) அறம் செம்மைப்பட்டு நின்ற ராசை நகர் எந்தாய்! வருத்தும் அழகுடைத்தலைவி என் வயிற்றில் பிறந்தாள். அன்றுமுதல் நிலாவின் ஒளி திருந்தார் புரம் எரிய எழுந்த நகை போன்று (தீ) சுடுகின்றது. அதனல் தன்னை மறந்திருந்தாள். தாதுநிறைபூங்கொன்றைமறக்கிலள்.

திலக(ம்)எழுது நுதல்பாகர், கூழைத் திகப்பரர்க்(கு)அன்பு
இலக மெழுகின்உருகேம்,வெவ் வேறய்தும் ஐம்புலனை
விலக எழுபவம் எவ்வாறிங்கு ஓயுமண் விண்முதலாம்
உலக(ம்) எழுமென் குமிழியென் பா(ர்)அறி வுள்ளவரே. 96

உள்ள(ப்) உருக ஒழியாத பாவியுள் ளத்திலுள்ள
கள்ள(ப்) உருக அருள்வ(து)என் ருே,செங் கமலமுகை
விள்ள, முருகலர் கூழைப் பிரான்,விண்ணு ளோர்கள்சிறை
தள்ள, முருகனை யீன்ரே யருள்சிவ சங்கரனே. 97

---

அறம்திருந்தா - ஒழுங்குபட்ட அறவழியை. நிலா, நகை யெனச் (சிவனது நகை - நெருப்பு) சுட்டது.

96. நெற்றித்திலக மணிந்த உமைபாகர், கூழையின் திகம்பரர்பால் (திசையே ஆடையாக வுடையவர்) மெழுகென அன்பால் உருகேம். வேறு வேருகத் தாறுமாருகப் போகும் ஐம்புலனை விலக்கேம். பின்பு எழும் பிறப்பு எவ்வாறு ஓயும்? மண்விண் முதலாகிய உலகம் நீரில் எழும் குமிழியே என்பார் கள் அறிவுள்ளவர்கள்.

மெழுகின் - இன் - ஒப்புப் பொருள்.

97. செங்கமல மொட்டு விரிய மணம் நிறை கூழைப் பிரான். விண்ணவர் சிறை வீடுபெற முருகனை ஈன்றருளினன். அவனை, உள்ளம் உருகி வழிபடாத பாவியேன், கள்ளம் உருக அருள்வதென்ருே! முருக என்றும் உருக என்றும் கொள்க. முருகலர் - மணமலர். முருகன் - சேயோன்.

சங்கர நாரணர், தென்வர ராசைத் தனிக்குழைவெண்
சங்கர், அர நார், அண நம்பான்மின் ஞர்க்குத் தவித்திடுநெஞ்
சம், கர(ம்) நா ரண வே(ள்)ளரித் தோர், சது(ர்) வேதபிர
சங்கர, நாரணங் கோர்பாகர் என்றஞ் சலித்தெண்ணுமே. 98

எய்தனந் தீவிட மானவர் மாமல ரேசன்சென்னி
... ... ... ... ... ...
... ... ... ... ... ...
... ... ... ... ... ... 99

... ... ... ... ... ... 100

---

98. சங்கரநாரணர் வரராசையில் தனிக்குழையாம் வெண்சங்கு அரனர் நம்பால் அண்ண, மின்னர்க்குத் தவித்திடு நெஞ்சு, கரம், நா இவைகள் போர்வேளெரித்தோர், சதுர்வேத பிரசங்கர், நாராயணர்பாகர் என்று அஞ்சலித்து எண்ணும்.

சங்கர் அரனர் அண (நெருங்க) நெஞ்சம் கரம் நா ரண வேள் எரித்தோர் முதலிய] துதிமொழிகளை எண்ணி அஞ்சலித்துக் கூறும். எதிர்நிரல் நிறையில் பாடலுள்ளது· முறையாகப் பொருள் காணப்பட்டது.

99-100 இருபாடல்களும் நிறைவாகக்]கிடைக்கவில்லை. அதனல் நூலுக்குக் கூழையந்தாதி –]என்பது காரணப் பெயராகவும் ஆயிற்று.

கோமதியம்மன் திருவடி வாழ்க!

உ

சிவமயம்

# செய்யுள் முதற்குறிப்பகராதி

[ எண் - செய்யுள் எண் ]


| | | | |
|---|---|---|---|
| அஞ்சமனைய | 40 | கடந்தத்தன | 68 |
| அணங்கரசே | 89 | கடவாரண | 29 |
| அரும்பாதகஞ் | 10 | கண்டலம்போ | 66 |
| அல்லியமருங் | 88 | கண்ணிக்கரும் | 70 |
| அளித்தடங்கா | 51 | கருந்தாரணி | 74 |
| அற்புதவந்தரி | 59 | கருமங்கவலை | 67 |
| அறந்திருந்தா | 95 | கலங்குதலைச் | 8 |
| அறுகாரரவணி | 24 | கற்பகக்கா | 62 |
| அன்பரிவைத்த | 92 | கறையரவம் | 11 |
| ஆவிக்குமாவி | 5 | காணப்பதஞ்சலி | 75 |
| இடுவந்தி | 47 | காணுதிருவ | 60 |
| இயலருகா | 63 | காமனம்பா | 65 |
| இல்லையரும் | 79 | காயந்தக | 53 |
| இழையாவை | 55 | காரங்கடுக் | 71 |
| இளந்தென்ற | 9 | காலங்கன | 72 |
| இன்றேனனைய | 19 | குயிலாய | 77 |
| உரைக்கடங் | 2 | குருக்நங்க | 32 |
| உள்ளமுருக | 97 | குழகரிமா | 6 |
| எதிராடியங்க | 58 | கூரத்திர | 91 |
| எய்தனந்தீ | 99 | கௌரவா | 28 |
| ஏற்றினனுக | 43 | கைக்கயமன் | 73 |
| ஐயானனத்தன் | 16 | கொடுங்கவி | 45 |
| ஒழியாயிரங் | 49 | கொழுந்தாம | 27 |
| கங்குலைமாலை | 69 | சங்கரநார | 98 |

| | | | |
|---|---|---|---|
| சுரராசை | 23 | புவனச்சரா | 36 |
| செய்யவம்போ | 22 | பூங்கமுகா | 76 |
| சேர்வரு | 44 | பூவைய மா | 86 |
| ஞானவர | காப்பு | பெற்றத்தி | 61 |
| தகரம்புனை | 33 | பொரவியந் | 26 |
| தஞ்சமளி | 4 | பொருத்தந்தி | 31 |
| தவமணிமா | 56 | போனக | 18 |
| தானவரப் | 83 | மங்கைக்கு | 50 |
| திலகமெழு | 96 | மடங்கலை | 81 |
| தென்மலையத் | 37 | மதியாதவ | 84 |
| தேனுகரக் | 3 | மயங்கத்தரா | 42 |
| தையலருந் | 52 | மாதரையம் | 25 |
| தொடரும்பல | 89 | மாலையிரா | 38 |
| தொடிகைக்கு | 12 | முயலகனுக | 80 |
| நாரமறுகு | 57 | முன்னிலங் | 15 |
| நிகராலை | 93 | மெல்லியராக | 17 |
| நித்தம்பயி | 46 | மேகத்தளவு | 30 |
| நினைவாரி | 54 | மேவியகங் | 41 |
| நேராயனங் | 21 | வந்திக்கமல | 48 |
| பகலவ | 85 | வரந்தருவார் | 94 |
| படுத்திருக்கு | 20 | வரைக் கேகய | 82 |
| பனியாழி | 90 | வன்னிகரந் | 64 |
| பாதாரவிந் | 35 | வாகைக்கணை | 87 |
| பார்தந்த | 1 | வித்துருமத் | 18 |
| பானலங் | 7 | வேலாவலைய | 34 |
| விடிக்கும் | 14 | வையகமத்தனை | 78 |




## தடுப்பவர் யார்?

கேடா வருநமனைக் கிட்ட வராதே தூரப்
போடா எனஓட்டி நின்பொற் கமலத்தா
[ளிணைக்கீழ்
வாடா எனஅழைத்து வாழ்வித்தால் அம்மா
[நின்னைக்
கூடா தெனயார் தடுப்பார் கோமதித்தாய்
[ஈஸ்வரியே.